

# சுதந்திரப் பறவைகள்

பறவை 08 பாடல் 07 1993 ஐப்பசி அன்பளிப்பு ரூபா 5.00


# முன்னேறிய இராணுவத்தின் முதுகெலும்பு முறிக்கப்பட்டது

## புலோப்பளைச்சமரில் மகளிர் படையணி

ஆனையிறவு, இயக்கச்சி முகாம்களிலிருந்து வெளியேறி கிளாலியை நோக்கி முன்னேறிய சிங்களப் படையணிகளைப் புலோப்பளையில் இடைமறித்து, விடுதலைப் புலிகள் துணிகர எதிர்த்தாக்குதலை நடத்தினர். சென்ற மாதம் 29 ம் திகதி நிகழ்ந்த இந்த வரலாற்றுச் சமரில் முன்னேறிய இராணுவத்தின் முதுகெலும்பு முறிக்கப்பட்டது. சிங்களப் படையணிகள் சிதறுண்டு ஓடின. டாங்கிகள், கவசவாகனங்கள் அழிக்கப் பட்டன. 125 சிங்கள இராணுவத்தினர் 4 மணி நேர மோதலில் கொல்லப்பட்டனர். இந்த வீராவேசத் தாக்குதலில் விடுதலைப் புலிகள் மகளிர் படையணியைச் சேர்ந்த பெரும எண்ணிக்கையிலான போராளிகள் கலந்துகொண்டு, எதிரி இராணுவத்துக்குப் பெரும் இழப்புகளை உண்டு பண்ணினர்.

கடந்த 29 ம் திகதி நடந்த புலோப்பளை வரலாற்றுச் சமரில் விடுதலைப் புலிகள் மகளிர் படையணி உக்கிரமாக இராணுவத்தினருடன் மோதியது. பெண் போராளிகள் மோட்டார்களைப் பெருமளவில் பாவித்துப் போர் புரிந்தார்கள். இவர்களின் வீராவேசத் தாக்குதல் இராணுவத்தினருக்குப் பேரதிர்ச்சியைக் கொடுத்துள்ளது

பெண் - ஆண் போராளிகளின் கடுமையான கனரக ஆயுதத் தாக்குதல்களினால் இராணுவத்தினரின் இரண்டு டாங்கிகள் சேதமடைந்துள்ளன; வரிசையாக முன்னேறிய டாங்கிகளுள் முன்னையதைச் சேதப்படுத்திவிட்டு, பின்னயதைத் தாக்குவதற்காக முன்னேறியபோதே இராணுவத்தினரின் திடீர்த் தாக்குதலினால் மேஜர் சுகன்யா வீரச்சாவைத் தழுவிக்கொண்டார்.

மேஜர் சுகன்யா கடற்புலிகள் மகளிர் படையணியின் பொறுப்பாளர் என்பதும், கிளாலியில் பயணிகள் படகுச் சேவை நடைபெறும் சமயங்களில் கடல் ரோந்து நடவடிக்கைகளில் ஈடுபட்டவர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இம் மோதலில் 125 படையினர் கொல்லப்பட்டதுடன், பல இராணுவத் தளபாடங்கள் கைப்பற்றப்பட்டன. 26 பெண் போராளிகள் உட்பட 83 புலிகள் வீரச்சாவைத் தழுவியுள்ளனர்.



புலோப்பளையில் கனரகஆயுதங்களுடன் முன்னேறும் பெண்புலிகள்.

---

## கடற் பெண்புலி மேஜர் சுகன்யா

கடந்த 29ம் திகதி புலோப்பளையில் நடந்த வரலாற்றுச் சமரில் மேஜர் சுகன்யா வீரச்சாவைத் தழுவிக்கொண்டார். இவர் கடற்புலிகள் மகளிர் படையணியின் பொறுப்பாளராவார்.

கிளாலியில் மக்களுக்கான படகுச் சேவை நடைபெறும் வேளைகளில் கடற்புலிகளால் வழங்கப்படும் பாதுகாப்புச் சேவையில் இவர் தொடர்ச்சியாக ஈடுபட்டவர் என்பது குறிப்பிடத்தக்கது.

கடற் புலிகள் மகளிர் படையணியின் முதல் மாவீரரான மேஜர் சுகன்யாவுக்கும், இவரோடு வீரச்சாவைத் தழுவிக்கொண்ட ஏனைய போராளிகளுக்கும் விடுதலைப் புலிகள் மகளிர் அமைப்பு தனது. வீரவணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறது.



விடுதலைப் புலிகளால் சேதப்படுத்தப்பட்ட டாங்கிகளுள் ஒன்று.


விடுதலைப்புலிகள் மகளிர் அமைப்பின் அதிகாரபூர்வ ஏடு



எங்கள் பார்வையில்...

# போரும் பெண்களின் பங்களிப்பும்

எதிரியின் சேனைகள் எமது எல்லைகளில் குவிகின்றன. யாழ்ப்பாணக் குடாநாட்டுப் போர் ஆரம்பமாகிவிட்டது. ஆனையிறவிலிருந்து கிளாலிக் கரையோரமாகப் பெரும் படையெடுப்பு ஒன்றை நிகழ்த்தி, குடாநாட்டு முற்றுகையை முழுமைப்படுத்தச் சிங்கள இராணுவம் பெரு முயற்சி எடுத்தது. ஆனால் எமது போராளிகளின் வீராவேச எதிர்த்தாக்குதலும் எதிரி சந்தித்த பேரிழப்பும் சிங்களப் பேரினவாதத்தின் திட்டத்தைச் சிதைத்துவிட்டன. கிளாலியிலிருந்து பின்வாங்கியுள்ள சிங்களப் படையணிகள் தொடர்ந்தும் பெரிய படையெடுப்புக்களை நிகழ்த்தி, தமிழ் மக்களை அழிப்பதற்குத் தயாராகிவருகின்றன.

புலோப்பளைச் சண்டையில் எமது போராளிகள் ஒரு வீர காவியம் படைத்தனர். பெரிய ஆட்பலத்துடனும் ஆயுத பலத்துடனும் முன்னேறிய எதிரிப் படைகளை எதிர்த்து, எமது போராளிகள் நிகழ்த்திய துணிகர எதிர்த்தாக்குதலில் இராணுவத் தரப்பில் என்றுமில்லாத பாரிய உயிர்ச்சேதமும், தளபாட இழப்பும் ஏற்பட்டன. இந்தச் சண்டையில் எம்மவர் தரப்பில் எண்பத்து மூன்று பேர் வீரச்சாவைத் தழுவிக்கொண்டனர். இவர்களுள் இருபத்தாறு பேர் பெண் போராளிகள். இம் மோதலிலே வீரச்சாவடைந்த மேஜர் சுகன்யா கடற்புலிகள் மகளிர் படையணியின் பொறுப்பாளராவார். கடற்புலிகள் மகளிர் படையணியின் முதலாவது மாவீரரும் இவரே.

தமிழீழத் தேசியப்போரில் பெண் புலிகள் முக்கிய பங்கு வகித்துவருகின்றனர். தமிழீழ விடுதலைப் போராட்டத்தில் முதல் களப்பலியான பெண் போராளி மாலதியின் ஆறாண்டு நினைவு நாளை இம்மாதம் 10ம் திகதி மிகவும் சிறப்பாகக் கொண்டாட விடுதலைப் புலிகள் மகளிர் படையணி தீர்மானித்திருக்கின்றது. ஆயுதம் தாங்கிய விடுதலைப் போரில் பெண்களின் பங்களிப்பைக் குறியீடு செய்யும் ஒரு எழுச்சி தினமாக இந்நாள் கொண்டாடப்படவிருக்கிறது.

இந்திய இராணுவத்துடனான முதலாவது நேரடி மோதலில், தனது உயிரைத் துச்சமெனக் கருதி, தன் துப்பாக்கியைமட்டும் காப்பாற்றுமாறு கோரி உயிரை விட்டாள் மாலதி. அன்றிலிருந்து (1987.10.10) ஈழத் தமிழ்ப் பெண்களின் புது வரலாறு ஒன்று ஆரம்பமானது. உடலின் ஒரு பகுதியைத்தானும் மீட்டெடுக்க முடியாத அளவுக்கு, இராணுவ டாங்கிகளை எதிர்த்துப் போராடி உடல் சிதைந்த மேஜர் சுகன்யாவுடன் இந்த வரலாறு தொடர்கிறது. இந்த வரலாற்று ஓட்டத்தில் பெண் போராளிகள் மகத்தான சாதனைகளை நிலைநாட்டியுள்ளனர். இன்று மகளிர் படையணி விரிவடைந்து ஒரு பெரிய போராட்டச் சக்தியாகப் பலம்பெற்று வளர்ச்சி கண்டுள்ளது.

பெண் புலிகள் எதற்காகப் போராடுகிறார்கள் என்பதைத் தமிழீழப் பெண்ணினம் ஆழமாகச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். எமது பகுதிக்குள் எதிரியானவன் நுழைவானேயானால், எமது மக்கள் என்றுமில்லாதவாறு பேராபத்துக்களைச் சந்திப்பர். பாரிய பொருளாதார அழிவுகள் ஏற்படும். குறிப்பாக இளம்வயதினர் முற்றாக அழிக்கப்பட நேரிடும். அதிலும் பெண்கள் எவ்வித வயது வேறுபாடுமின்றிப் பாலியல் வன்முறைக்கு உட்படவேண்டிய நிலை உருவாகும்.

இவற்றையெல்லாம் தடுக்கவேண்டுமானால் எமது நாடு விடுதலை அடையவேண்டும். அந்த விடுதலையூடாகத்தான் பெண் விடுதலையை முழுமையாகப் பெற்றுக்கொள்ளலாம் என்ற ஒரே நோக்கில்தான் பெண் புலிகள் போராடுகின்றார்கள். இந்த மண்ணிலே பிறக்கின்ற எல்லோருமே விடுதலை கிடைக்கும்வரை போராடவேண்டும் என்பது வரலாற்று நியதி. இந்த நியதியைத் தமிழீழப் பெண்கள் தெளிவாகப் புரிந்துகொண்டு, தமது பங்களிப்பை வழங்க முன்வரவேண்டும்.

# பன்னிரு வேங்கைகளின் நினைவாக

கூட்டுச்சதிக் கடலுள்
கொடூரமாய் மூழ்கடிக்க
காத்திருந்த நாடுகள்
கதிகலங்கி விறைத்திருக்க
விருப்புடன் நஞ்சுண்டு
தமிழ் வீரம் காத்திட்ட
எங்கள் தேசத்தின்
உயிர் அரண்களே!
உறுதி
உங்கள் வாழ்வை
உதறிட வைத்தது.
விடுதலைத் தாகம்
உங்கள் விழிகளை
நெருப்பாக்கியது.
நீசப்பொறி நீறாகியது.
எங்கள் தேசம்
இன்னும் ஒருபடி
உயர்ந்து கொண்டது.
அதிகார உலையில்
உருக்க முடியாத
உருக்குகள் நீங்கள்.
ஈகவேள்வியால்
உங்களை உருக்கி,
எங்கள் நினைவுக்குள்
நிறைந்து
உரமாய் நாம் நடந்திட
வழிகாட்டுகின்றீர்கள்.
அதனால்தான்
எதிரிப்படையின்
நம்பிக்கைச் சுவர்கள்
தகர்கின்றன.
எங்கள்
வீரத்தின் விளைவுகள்
மலர்கின்றன.

சக்தி

# மாலதியின் நினைவு நாள் எழுச்சியுடன் ஏற்பாடு

தமிழீழ விடுதலைப் போராட்டத்தில் முதற் களப்பலியான 2ம் லெப். மாலதியின் ஆறாவது ஆண்டு நினைவு நாள் இம்மாதம் 10-ந் திகதி எழுச்சியுடன் கொண்டாடப்படவுள்ளது.

இவர் இந்திய - தமிழீழப் போர் ஆரம்பித்த 1987.10.10 அன்று இந்திய இராணுவத்துடனான நேரடி மோதலில் வீரச்சாவடைந்தார். இவரது நினைவாக உருவப் படத் திரை நீக்க நிகழ்வுகளும் பொதுக் கூட்டங்களும் நடைபெற ஏற்பாடாகியுள்ளன.

இம் மாதச் சுதந்திரப்பறவைகள் இதழ் 2ம் லெப். மாலதியின் சிறப்பிதழாக வெளிவருகிறது.

# புலோப்பளை வரலாற்றுச் சமரில்....


மேஜர் சுகன்யா


மேஜர் யாழிசை (மனோ)


கப்டன் கலயாணி


லெப். அன்பழகி (அபி)


லெப். குயிலி


லெப். செம்பிறை (சௌமி)


2ம் லெப். வாசுகி


2ம் லெப். நரேந்தினி


2ம் லெப் வேல்விழி


2ம் லெப். தாரகா


2ம் லெப். சீதாலட்சுமி


2ம் லெப். மிதுலா


2ம் லெப். காரணி


2ம் லெப். சசி


2ம் லெப். செல்வம் (தனா)


வீரவேங்கை ஜனார்த்தனி


வீரவேங்கை கவிமலர்


வீரவேங்கை ஜெயமதி


வீரவேங்கை தருமலர்


வீரவேங்கை ரமணி


வீரவேங்கை துவாரகா


வீரவேங்கை செவ்வந்தி


வீரவேங்கை சுரபி


வீரவேங்கை தாட்சாயினி


வீரவேங்கை எழிலருவி

கனல் வாய்பிளந்த களமெல்லாம்
அனல் பொங்கி எழுந்தீர்
நிலம்தன்னை மீட்கவென
நினைவாகிப் போனீர் — உங்கள்
குருதி காயாத மண்மீது
புதிய பாதங்கள் பதியும்
பகைவிட்டோட அவை போராடும்.

# விடுதலைப் புலிகளின் போராட்ட

*போராளிகள்.*

*இவர்கள் வித்தியாசமானவர்கள். இவர்களின் கைகளில் ஆயுதங்கள். அவை இரும்புதான். ஆனால் இவர்களின் மனங்கள் மென்மையானவை. மென்மையான உள்ளம் கொண்ட இவர்கள், காலத்தின் தேவை கருதி, காலம் இட்ட கட்டளையை நிறைவேற்ற ஆதிக்க வெறியர்களுக்கு எதிராகப் போராடுகிறார்கள். இவர்கள் தேசத்தின் விடியலுக்காகத் தங்களது இன்பங்களைத் தொலைத்தவர்கள்: வசந்தங்களை இழந்தவர்கள்.*

*ஒவ்வொரு போராளியின் சுபாவங்களும் செய்கைகளும் வித்தியாசமானதுதான். அத்தோடு, கூடவே இருப்பவர்களுக்குத்தான் ஒவ்வொரு போராளியின் உள்ளத்து உணர்வுகளையும் புரிந்துகொள்ள முடியும். எட்ட இருந்து பார்த்தால், ஒரு போராளியை விளங்கிக்கொள்வது கடினம்.*

*இந்தவகையில்*

*விடுதலைப் புலிகளின் போராட்ட வரலாற்றில் முதல் பெண் புலியாக வீரச்சாவைத் தழுவிக்கொண்ட 2ம் லெப். மாலதியின் நினைவுகளை இங்கே மீட்டல் செய்கின்றேன்.*

*பயிற்சிப் பாசறையில் இருந்து வீரச்சாவடைந்த நாள்வரை அவளுடன் பகிர்ந்து கொண்ட சம்பவங்களில், அவளிடம் கண்டு கொண்ட திறமைகளில், அவளிடம் குடிகொண்டிருந்த குறும்புத் தனங்களில் என்னால் எழுத முடிந்தவைகளைமட்டும் இங்கே வரிக்கு வரியாக எழுதிக்கொண்டு செல்கின்றேன்.*

**1985**ம் ஆண்டு முண்டு முற்பகுதி,

மலைப்பிரதேசத்தில் அமைந்திருந்த ஒரு பயிற்சி முகாமில், எமது பாசறைக்கு முன்பாக, ஒருபாறாங் கல்லில் இருந்து 'போர்க்குரல் 1', படித்துக்கொண்டிருந்தேன். எனக்கு முன்பாகச் சிறிது தூரத்தில் அருவி ஒன்று ஓடிக்கொண்டிருந்தது. திடீரென அந்த அருவி ஓடுகின்ற ஓசையோடு சேர்ந்து கலகல என்ற சிரிப்பொலியும், கதைக்கின்ற சத்தமும் கேட்டது. அத்திசையை நோக்கினேன். ஏறத்தாழ பதினைந்து, இருபது பெண்கள் வண்ண வண்ணச் சட்டைகளுடன் வந்துகொண்டிருந்தார்கள்.

முன்னுக்கு வந்தவள் நீலக்கலரில் புள்ளிகள் போட்டிருந்த சட்டையுடன், இரட்டைப்பின்னலுடன், எட்டி எட்டிக் கால்களை வைத்து, வேகமாகவும் மிடுக்காகவும் நடந்துவந்துகொண்டிருந்தாள். என்னருகில் வந்ததும் என்னை ஒருமாதிரி மிடுக்காகப் பார்த்தாள். பின் எல்லோரும் பாசறைக்குள் நடந்து சென்றார்கள். நான் நினைத்துக் கொண்டேன்; 'எங்களைப்போல பயிற்சி எடுக்கத்தானே வந்தார்கள். பயிற்சியின் போது உந்த மிடுக்கு எங்கே போகுதோ தெரியாது.'

இரண்டு நாள் கழித்து நான் என்னுடைய அறையில் நின்றிருந்தேன். நீலநிறச்சட்டை அணிந்தவள் வந்து என்னைப் பார்த்துக் கேட்டாள்;

"அக்கா, விளக்குமாறா வைத்திருக்கிறியள்?" என்று. நான் உடனே பெரிதாகச் சிரித்துவிட்டு "இல்லை இல்லை எங்களிடம் விளக்குமாறுதான் இருக்கின்றது"

என்றேன். பின் இவளிடம் இடம், பெயர், ஊர் எல்லாவற்றையும் கேட்டேன். முழுப்பெயர் சகாயசீலி என்றாள். வீட்டுப்பெயர் சகாயம் என்றாள். பின் நான் சொன்னேன், "நீங்கள் சொந்தப் பெயரை இனிமேல் யாருக்கும் சொல்லவேண்டாம். ஏதாவது பொய்ப்பெயரைச் சொல்லுங்கள்"

என்றேன்.

இவள் கதைக்கும் தமிழுக்கும் நான் கதைக்கும் தமிழுக்கும் நிறையவே வித்தியாசம் இருந்தது இதனால்தான் 'விளக்குமாறு வைத்திருக்கின்றீர்களா' எனக் கேட்பதற்குப் பதிலாக் 'விளக்குமாறா வைத்திருக்கிறீர்கள்' என்று கேட்டாள்.

பின்னர் இவளைக் காணும்போதெல்லாம் "விளக்குமாறா வைத்திருக்கிறியள்" "பேனையா வைத்திருக்கிறியள்" என்று மற்றவர்களுக்குச் சொல்வதுமாதிரிப் பகிடிவிட்டுச் சிரிப்பேன்.

நாங்கள்தான் முதல் முதலில் விடுதலைப்புலிகளின் பெண் போராளிகளாகப் பயிற்சிக்குச் சென்றிருந்தோம். வெவ்வேறுபட்ட சமூகத்தில் இருந்து எல்லாரும் வந்திருந்ததால் எங்களுக்குள், மொழி உச்சரிப்பில் வேறுபாடு, ஊர்வேறுபாடு, மாவட்ட வேறுபாடு இருந்தது. தொட்டில் பழக்கம் சுடுகாடு வரை என்பார்கள். ஆனால் எங்களுக்கு இந்தப் பழமொழி மாறிவிட்டது. எங்களுடைய பழக்கங்கள் விடுதலைப்புலிகள் அமைப்புக்கு வரும்வரை மட்டுந்தான் இருந்தது. விடுதலைப்புலிகள் அமைப்பில் பயிற்சி எடுத்து முடித்தபின்னர் எங்களுடைய பண்பாட்டுக்கோலங்கள், பழமை வாதங்கள், வேறுபாடுகள், மூடநம்பிக்கைகள் எல்லாமே ஆணிவேறாக அக்கு வேறாகச் சிதைந்துவிட்டன.

அவளின் தமிழைப் பகிடிபண்ணியதால், இவள் ஒருநாள் எங்களுடைய பொறுப்பாளரிடம் என்னைப்பற்றி முறையிட்டாள். என்னையும் இவளையும் விசாரித்த பொறுப்பாளர், அவள் முன்னிலையில் அவளை எண்ணும்படி கூறி, என்னைத் தோப்படிக்கவிட்டார். அவர் சென்றபின் நான் தோப்படிக்க, இவள் எண்ணிக்கொண்டு நின்றாள். தோப்படித்துக்கொண்டிருக்கும்போது இடையில் எண்ணுவதை நிறுத்திவிட்டு, "இனி நீங்கள் அடிக்கவேண்டாம். நான் அடிக்கின்றேன்" என்றாள். "இல்லை. எனக்குத் தந்த தண்டனையை நானே செய்து முடிக்கின்றேன்" என்றேன். அவள் என்னைப் பிடித்து நிற்பாட்டும்படி கெஞ்சிக் கேட்டும், நான் கோபமாக ஏசிவிட்டு நானே தண்டனையைச் செய்துமுடித்தேன்.

இரண்டு நாட்களாக நான் தாண்டித்தாண்டி நடந்துகொண்டிருந்தேன். அப்போதெல்லாம் இவள் என்னைக் கண்கலங்கப் பார்ப்பாள்.

ஒரு ஞாயிறு காலை, எமது காலை உணவைப் பெறுவதற்காக நான் வரிசையில் நின்றுகொண்டிருந்தேன். அப்போது இவள் என் பின்னால் நின்று கொண்டிருந்தாள் நான் சாப்பாட்டைப் பெற்றுக் கொண்டு, எங்களுக்காக ஒதுக்கப்பட்ட இருக்கையான மரக்குற்றியில் அமர்ந்தபோது, இவளும் என்னருகில் வந்து இருந்தாள். பின் என்னுடன் சரளமாக கதைத்தாள். தான் எனக்குத் தண்டனை வாங்கித்தந்ததையிட்டுக் கவலைப்படுவதாகக் கூறினாள். இவளின் இரக்கமான உணர்வுகளைப் புரிந்து கொண்ட நான், "பிரச்சினையில்லை. நாங்கள் நல்லவர்களாக வளர்வதற்காகத்தானே இந்தத் தண்டனைகள்" என்றேன்.

## நோவுதா மணி? இனி அடிக்கமாட்டன்.

மன்னாரில் பரந்த வயல்வெளிகளைக் கொண்ட ஆட்காட்டிவெளியில், பேதுரு சகாயசீலி என்னும் பெயரோடு, துடிப்பாக விளையாட்டுக்களிலும், படிப்பிலும் திறமையாகத் திகழ்ந்தவள், எமது பயிற்சிப் பாசறையில் மாலதி என்னும் பெயரோடு துடிதுடிப்பான சுறுசுறுப்பான போராளியாக வீறு நடைபோட்டுக்கொண்டிருந்தாள்.

பயிற்சிப் பாசறையில் நானும் மாலதியும் நல்ல தோழிகளாக இருந்தோம். இருவரும் சண்டை பிடிக்காத நாளே இல்லை என்றுதான் சொல்லலாம். ஆனால் அடுத்த நிமிடமே சமாதானமாகிவிடுவோம். ஏதாவது நான் இவளுக்குப் பிடிக்காதமாதிரிச்சொன்னால், உடனே எனமேல் அடிதான் முதல் விழும். பின்னர் தான் என்னுடன் கதைப்பாள். சிறிது நேரத்தில் அடித்த இடத்தைத் தொட்டுப்பார்த்து, "நோவுதா மணி? இனி அடிக்கமாட்டன் மணி" என்பாள். எப்போதுமே இவ யாருடனும் அன்பாகக் கதைக்கும் போது 'மணி' என்ற சொல்லையே பாவிப்பாள். இவளுடைய இந்தப் பாசையை நாளடைவில் நானும் பழகிக்கொண்டுவிட்டேன். இப்போது கூட இவள் பாவிக்கும் 'மணி' என்னும் சொல் என்னுடைய பேச்சுவழக்கிலும் வருவது உண்டு.

பாசறையில் எல்லாவிதமான பயிற்சிகளையும் மாலதி சிரமமின்றிச் செய்து முடித்தாள் இவள் எந்தப் பயிற்சியையுமே சிரமம் என்று கூறியதுமில்லை. செய்ய முடியாது எனக் கூறியதும் இல்லை. நாங்கள் எமது பாசறைக்குப் பத்துப் பதினைந்து கிலோ மீற்றர் தூரத்தில் இருந்து உணவுப் பொருட்களைத் தூக்கி வருவோம். இவ்வேளையில் யாராவது கூடிய பாரமான பொருட்களைத் தூக்கி வந்தால், இவள் தான் கொண்டு வந்ததை மற்றவளிடம் கொடுத்துவிட்டு, மாறித் தூக்கி வருவாள். இவள் தன் பொருட்களை எல்லாருக்கும் முதல் பாசறைக்குக் கொண்டு வந்து சேர்த்து விடுவாள். இவள் என்னிடம் கேட்பாள், "வா மணி. திரும்பிப் பொருட்களைத் தூக்குமிடம் செல்வோம்" என்று. "இப்பத்தானே வந்தோம்? ஏன் திரும்பிப் போகவேண்டும்?" என்று கேட்டால், "பாவமடி. யார் ஏலாமல் வைச்சு, வைச்சுத் தூக்குதுகளோ தெரியாது. வாமணிபோவம். இடைக்கிடை நாங்கள் தூக்கிக் கொடுப்போம்" என்று என்னை கூட்டிச் செல்வாள்.

## அநியாயப்படுவார் செய்கின்ற வேலைகள்.

மாலதியிடம் சரியான முரட்டுத்தனமும், சரியான இரக்கமான குணமும் ஒருங்கே அமைந்திருந்தன. தன்னிடம் இருப்பதை இல்லாதவர்களுக்குக் கொடுப்பதிலும், தானாகச் சென்று உதவிகள் செய்வதிலும் மாலதி என்றுமே பின் நின்றதே இல்லை.

பயிற்சி முடிந்ததும் நாங்கள் மன்னாருக்கு வந்தோம். மன்னாருக்கு வந்ததும் இவள் கொலரை இழுத்து விட்டுச் சொன்னாள், "எப்படி எடி? நீங்கள் முதல் முதல் தமிழீழத்தில் என்ரை மாவட்டத்திலை தான் பெண் போராளிகளாகக் காலடி எடுத்து வைத்திருக்கின்றீர்கள்" என்றாள்.

பின்னர் நாங்கள் மோட்டார் சைக்கிள் பழகினோம். அங்கே, இங்கே என்றெல்லாம் விழுந்தெழும்பிப் பழகினோம். இவள் முதலில் பழகிவிட்டாள். "பின்னால் ஏறு. நான் ஓடுகிறேன்" என்பாள் எங்காவது மோதப்போவது தெரிந்தால், தான் பாய்ந்து ஓடிவிடுவாள். நாங்கள்தான் விழுந்து முக்குடைவோம். விழுந்து கிடப்பதைப் பார்த்துச் சிரித்துக் கொண்டு நிற்பாள். "நில்லடி வாறன்" என்று தடி எடுத்துக் கொண்டு ஓடினால் "மணி, மணி", என்று சாலம் பண்ணிச் சமாளித்துவிடுவாள்.

ஒருநாள் என்னையும் இவளையும் தேங்காய் எடுத்து வரும்படி முகாம் பொறுப்பாளர் வெளியில் அனுப்பினார். இவள்தான் மோட்டார் சைக்கிள் ஓடி வந்தாள். வரும் வழியில் "மாந்தையில் எமக்கு பெட்டைகள் கட்டவுட் நிற்கிறார்கள் அங்கே போட்டு வந்து தேங்காயை எடுத்துப் போவம்" என்றாள். "இல்லையடி. நேரம் போனால் பொறுப்பாளர் தண்டனை தருவா. வேண்டாம்" என்றேன். "இல்லையடி. நீ வா. நான் எல்லாம் சமாளிக்கிறேன்" என்றாள். சரி என்று மாந்தைக்குச் சென்று, திரும்பி, தேங்காய் எடுத்து வந்தோம் நேரம் போனதால் கண்மண் தெரியாமல் ஓடிவந்தாள். இடையில் ஒரு மரத்துடன் மோதி இருவரும் விழுந்துவிட்டோம். இரண்டு பேருக்கும் காயம். எனக்கு உதடு உடைந்துவிட்டது. அவளுக்கு முழங்காலிலும், முழங்கையிலும் காயம். எனது இரத்தத்தைத் துடைத்துவிட்டு "மணி. மோட்டார் சைக்கிளாலை விழுந்தது என்று பேசில யாருக்கும் சொல்லாதை" என்றாள். "ஏன்?" என்றேன். "எல்லாரும் பகிடி பண்ணுவாளுகள்" என்றாள்.

# வரலாற்றில் முதல் பெண்புலி

"அப்ப காயத்திற்கு என்ன சொல்வது?" என்றேன். "உனக்குத் தடி குத்திவிட்டது என்று கூறுகிறேன். எனது காயத்தை யாருக்கும் காட்டமாட்டேன்" என்றாள். அதேமாதிரி மடித்திருந்த சேட் கையை இழுத்து மூடிவிட்டாள். முகாமுக்குப் போய்ச் சேர்ந்தோம். அங்கே இதே மாதிரியே கூறினாள். இருவரும் மோட்டார் சைக்கிளால் விழ்ந்ததை யாருக்கும் சொல்லவில்லை. ஒருநாள் எனக்கு எதற்கோ அடித்துவிட்டாள். இருவருமே துரத்துப்பட்டுச் சண்டை செய்ய, பொறுப்பாளர் வந்து விலக்குப் பிடித்து விட்டு, இருவருக்கும் தண்டனை தந்து, "உங்கள் இரண்டு பேரையும் மேய்க்க எனக்கு பிறம்பாக ஒருநாள் வேணும்" எனக் கூறி, "போங்கோ" என்று விட்டார். மாலதி அடித்த கோபத்தில் மோட்டார் சைக்கிளால் வீழ்ந்ததை எமது பொறுப்பாளரிடம் கூறிவிட்டேன். "சொல்லிப் போட்டாய். இஞ்சால வா. உனக்கு நல்லாத் தாறன்" என்றாள். இவள் நினைத்ததைச் செய்தே முடிப்பாள். இதனால் அவளின் மோட்டடிக்குப் பயந்து, பொறுப்பாளருக்குப் பின்னாலேயே திரிந்தேன். அன்றிரவு நித்திரையில் வைத்து 'நம்பிக்கைத்துரோகி' எனக் கூறி, எனக்கு அடித்து விட்டாள். நான் நல்ல நித்திரையில் இருந்ததால் திருப்பி அடிக்காமலேயே படுத்து விட்டேன்.

ஒருநாள் எங்களுடைய பொறுப்பாளர் எமக்குப் புதிய சயனைட்டுகள் தருவதற்காகச் சயனைட்டைக் கறுப்பு நூலால் கட்டிக்கொண்டிருந்தார். நானும் மாலதியும் பொறுப்பாளருக்கு அருகில் இருந்தோம். "நாங்களும் கறுப்பு நூல் கட்டுறம். தாங்கோ" என்றோம். பொறுப்பாளர் "இரண்டு பேரும் ஓரிடத்தில் வந்தால் நன்மை நடக்காது. அநியாயம்தான் நடக்கும். இரண்டு பேரும் சும்மா இருங்கோ" என்றார். கெஞ்சிக் கேட்டதால் எனக்குச் சயனைட்டில் கறுப்பு நூல் கட்ட அனுமதி கிடைத்தது. நான் சயனைட் கழுத்தில் நூலைப் போட்டு இறுக்கிக்கொண்டிருந்தபோது, இவள் "இறுக்காவிடில் கழண்டுவிடும். நல்லா இறுக்கு" என்றாள். நான் இறுக்கியபோது, "இன்னும் இறுக்கி இழு மணி. இறுக்கி இழு மணி" என எனக்கு உற்சாகம் மூட்டியதால், நான் பலமாக இழுத்தபோது, சயனைட் கழுத்தோடு உடைந்து விட்டது. எனக்குத் தூள் பறந்ததால் சாதுவான மயக்கம் ஏற்பட்டது. அவள் உடைந்ததை எடுத்து மணந்தபோது, அவளும் சாதுவான மயக்கமுற்றாள். பொறுப்பாளர் ஏசினார், "அநியாயப்படுவார் செய்கிற வேலைகள் ஒன்றா, இரண்டா......?"

## கோட்டையிலும் தொலைத்தொடர்பு நிலையத்திலும்

1987 ல் மன்னாரை விட்டு யாழ்ப்பாணம் வந்தோம். யாழ்ப்பாணத்தில் கோட்டையைச் சுற்றிக் காவற்கடமையில் ஈடுபட்டிருந்தோம். இக்காலப்பகுதியில் பீச் றோட்பக்கமாகக் காவற் கடமையில் நின்றோம். ஒருநாள் நாங்கள் வேறு பகுதியில் கண்ணிகள் வைக்கும் வேலைகளில் ஈடுபட்டிருந்தோம். மாலதிமட்டுமே காவல் கடமையில் நின்றாள். அப்போது எதிர்பாராதவிதமாகக் கோட்டையில் இருந்து இராணுவத்தினர் முன்னேறி மாலதியின் காவல நிலைக்கு முன்னால் வந்துவிட்டனர். மாலதி சிறிது நேரம் தனித்து நின்றே இராணுவத்தினருக்கு எதிராக ரவைகளைப் பொழிந்து தள்ளினாள். சிறிது நேரத்தில் மேஜர் சோதியாக்காவும், எமது பொறுப்பாளர்களும் சென்று சண்டை செய்தனர். மூன்று, நான்கு பேர் மட்டுமே சண்டை செய்வதைக்கண்ட இராணுவத்தினர் மேலும் முன்னேற முயற்சி செய்தனர். அவ்வேளையில மேஜர் சோதியாக்காவின் குப்பி உடைந்து, அவர் மயக்கம் அடைந்ததால் அவரை இருவர் தூக்கிச்சென்றனர். மாலதி தனித்து நின்றே சுட்டுக்கொண்டு நின்றாள். மேஜர் சோதியாக்காவைப் பாதுகாப்பான இடத்துக்குக் கொண்டுசென்றதும், மாலதி ஓடிச்சென்று, நாம் ஏற்கனவே வைத்திருந்த பன்றிக்குட்டி மைன்சை வெடிக்கச் செய்துவிட்டாள்.

பெரியதொரு வெடி ஓசையினால் அதிர்ச்சி அடைந்த இராணுவத்தினர் பயத்தின் பீதியால் பின்வாங்கி, கோட்டைக்குச் சென்றுவிட்டனர். பின்னர் "மாலதி ஏன் பன்றிக்குட்டியை அமத்தினாய்" எனக் கேட்கப்பட்டபோது, "ஆமியை எதிர்த்துத் தாக்குவதற்கு எமது ஆட்கள் நிறையப் பேர் இல்லை என்பதை அவன் தெரிந்துவிட்டான். இதனால் விரைவாக முன்னேறினான். எங்கடை ஆட்கள் வருவதற்கிடையில் ஆமி எங்களுடைய நிலைகளுக்கு முன்னேறி விடுவான் என்றதினால் அவனை பின்வாங்கச் செய்யவே எங்கேயோ கிடந்த மைன்ஸை அமத்தி விட்டேன்" என்றாள்.

மாலதி திடீர் என இப்படி ஓர் மாற்று நடவடிக்கையை செய்ததையிட்டு நாம் மகிழ்ச்சியடைந்தோம். மாலதி எவ்வளவுதான் விளையாட்டுத்தனம் செய்தாலும் அவளுக்குள் வீரமும் அஞ்சாமையும் நிறைந்து காணப்பட்டது. கோட்டையில் இருந்து செல்லடி தொடங்கியதும் வெளிக்கிடப் போறான் என்ற எணணம் எங்களுக்கு இருக்கும். உடனே நாங்கள் இராணுவத்தை எதிர்ப்பதற்கு, எங்களுக்கு என ஒதுக்கப்பட்ட காவல் நிலைகளுக்கு விரைந்து செல்வோம்.

இந்த விரைவு வேளைகளில் மாலதியே தனது நிலைக்கு முதலில் சென்று விடுவாள். நாமெல்லாம் செல்லடிக்கு நிலை எடுத்து, நிலை எடுத்துச் செல்வோம். மாலதியோ அப்பிடியில்லை. முகாமில் இருந்து ஓடத்தொடங்கினால் தனதுகாவல் நிலையை அடைந்ததும்தான் திரும்பிப்பார்ப்பாள். சிலர் கூறுவார்கள் 'முரட்டு மாலதி' என்று......

## துடிப்பான போராளியின்



## பசுமையான நினைவுகள்

மாலதி எந்நேரமும் சேட் கையை உயர்த்தி மடித்துவிட்டு, ஜீன்ஸ் காலை மடித்துக் கொண்டே நிற்பாள். நாங்கள் 'ரகுமான் எடுவை' என்று பகிடி பண்ணினால், அவள் "இல்லை. நான் புரூஸ்லி எடுவைதான் எடுகிறன். எப்போதும் கையாலும் காலாலும் சண்டை பிடிக்கத் தயாராக இருக்கிறேன். என்னைக் கண்டால் ஆமி ஓடுவான்" என்று கூறுவாள்.

1987 ன் முற்பகுதியில் கோட்டைப் பக்கத்திலுள்ள தொலைத் தொடர்பு நிலையம் தாக்கப்பட்டது. இத்தாக்குதலில் மாலதி பங்குகொண்டாள். சண்டை என்றால் மாலதி துடிப்புடன் நிற்பாள். உலங்குவானூர்தி வருவதையோ, குண்டு விச்சு விமானம் வருவதையோ, செல்வருவதையோ பார்க்கவும் மாட்டாள். முன்னுக்குச் சென்று, ஆமியைச் சுடுவதிலேயே குறியாக நிற்பாள். இதே மாதிரித்தான் தொலைத்தொடர்பு நிலையத் தாக்குதலிலும் ஈடுபட்டாள். ஒரு பெண் போராளி இந் நடவடிக்கையில் காயமடைந்தாள். காயப்பட்டவளைத் தூக்கிச் செல்லும்படி மாலதியிடம் பொறுப்பாளரால் பணிக்கப்பட்டபோது (இந்நேரம் சண்டை முடிந்து, ஆயுதங்கள் கைப்பற்றப்பட்டுக்கொண்டிருந்தன), மாலதி செல்ல மறுத்து, "வேறு ஒருவரை அனுப்புங்கள்" என்று கெஞ்சினாள்.

"வேறுயாருமில்லை. சண்டை முடிந்ததுதானே. நீங்கள் கொண்டு போங்கோ" என்றபோது, அவ்விடத்தைவிட்டுப்போக விருப்பமின்றி, காயப்பட்ட போராளியைத் தூக்கிச் சென்று, மதிலுக்கு அங்கால் வேறு ஒரு போராளியைக் கூப்பிட்டு, "இவரைக் கொண்டு போகட்டாம் என்று பொறுப்பாளர் சொன்னவர்" எனக்கூறி, காயப்பட்ட போராளியை அவசரமாக ஒப்படைத்துவிட்டு மீண்டும் தான் நின்ற இடத்துக்கு விரைந்து ஓடிவந்துவிட்டாள்.

இந்தச் சண்டையின்போது மாலதியின் உடலின் சில பகுதிகளில் (கை, கால் உட்பட) சிறு, சிறு செல் துண்டுகள் இருந்தன. "மருத்துவமனைக்குச் சென்று பீஸ்களை எடுத்துவிட்டு வா" என்றபோது, "போகமாட்டேன்" என்று மறுத்துவிட்டு; புதுப் பிளேற் எடுத்து தானே தன் உடம்பில் இருந்து செல் துண்டுகளை வெட்டி எடுத்தாள். தன்னைத்தானே கீறும் அளவுக்கு அபாயகரமான துணிவு கொண்டவள்தான் அவள்.

## மாலதியின் குறும்புகள்

மாலதி, சண்டை செய்வது என்றால் மிகவும் சந்தோஷத்தில் துள்ளிக்கொண்டு நிற்பாள். சண்டைக்கான அறிகுறிகள் எதுவும் தென்பட்டால், உடனேயே மகிழ்ச்சியோடு "ஆமிக்குச் சொல்லிவிடிப்பேனடி, அடிச்சன் என்றால் நெற்றி அடிதானடி" என்று பாடிக்கொண்டே நிற்பாள்.

1987 இன் நடுப்பகுதியில் நாங்கள் கோப்பாய்க்கு வந்தோம். கோப்பாயில் இருந்து ஒவ்வொரு இரவும் நாவற்குழி இராணுவ முகாமைச் சுற்றிலும் காவற்கடமை நிலைகள் இருந்தன. இதில நாம் கோப்பாய்ப்பாலத்தில் காவற்கடமையில் ஈடுபட்டிருந்தோம். இரவில், இரண்டு பிரிவாகப் பிரிந்து படுப்போம். எங்களுக்குக் கிடைத்த இடம் சுடலை. சுடலைக்குள் படுத்திருப்போம். சத்தங்கள் எதுவும் கேட்டால் காவற்கடமையில் நிற்பவர் இன்னும் இரண்டொருவரை எழுப்பிக் கொண்டு மணமேட்டால் சென்று, ஆமியின் நடமாட்டத்தை அவதானித்து வருவோம்.

மாலதி காவற்கடமையில் நிற்கும்போது ஏதாவது சத்தம்கேட்டால், தானே தனியாகச் சென்று எதிரியின் நடமாட்டத்தை அவதானித்து வருவாள். எங்கள் நிலைக்கு முன்னால் தண்ணீர் இருந்தது. தண்ணீர்ச் சத்தம் கேட்கும். நாவற்குழி இராணுவ முகாமில் அடிக்கடி விளக்குகளை அணைப்பான் ஆமி. அவ்வேளையில் நாங்கள் உசார் நிலைக்கு வருவோம். காவற்கடமையில் நிற்கும் மாலதி அடிக்கடி எல்லாரையும் எழுப்புவாள். திடுக்கிட்டு நித்திரையால் எழும்பி "என்னடி" என்றால், "பேயெடி, பேயெடி" என்று பயமுறுத்துவாள். "உண்மையாய் நான் கறுப்பாய், வெள்ளையாய் ஆவியைக் கண்டனான்" என்று கூறுவாள். "நேற்று எரிச்ச பொடியின்ர ஆவியடி. இண்டைக்குத்தான் வெளியே போகும்" என்று மேலும் மேலும் என்னைப் பயமுறுத்துவாள்.

ஒருநாள் நான் ஒரு சமாதி மேட்டில் படுத்திருந்தபோது மாலதி வந்து எழுப்பிச்சொன்னாள், "எடியே கெதியாய் எழும்படி.. எழும்படி" என்றாள். அவசரமாக எனது ஆயுதத்தையும் எடுத்துக்கொண்டு "ஆமியோ வந்திட்டான்" என்று கேட்டபோது "எடியே. நீ படுத்திருந்த இடம் சமாதியடி" என்றாள். எனக்குச் சரியான கோபம். ஏசிவிட்டுப் போய்ப்படுத்துவிட்டேன். மாலதியின் இந்தத் தொல்லைகளால் மாலதிக்குக் காவற்கடமை நேரம் போடாமல் விடுவோம். இரண்டு நாளால் சண்டைபிடித்து, காவற்கடமை நேரம் போடச் செய்துவிடுவாள்.

காவற்கடமையில் ஈடுபடும் இடத்துக்குச் சென்றதும் "வாடி. நித்திரை கொள்ளும்வரை இடம் பார்ப்போம்" என்பாள். "சும்மா ஓரிடத்தில் இரடி" என்றால், "எடியே எங்கே எங்கே நிலை எடுத்து அடிபடலாம் என்று இடம் பார்த்தால் தானே ஆமி வந்தால் அட்டகாசமாக அடிபடலாம்" என்பாள். பின்னர் இரண்டு பேரும் கோப்பாய் கிறசர் அடியில் இருந்து கைதடிப் பாலம் தொங்கல்வரை நடந்து, நடந்து செல்வோம்.

பகலில் எங்களுடைய முகாமில் நிற்போம். பகலில் இரண்டுபேரும் ஒரே சண்டை பிடிப்போம். சற்று நேரத்தில் சமாதானமாகி ஒன்றாக வெளியில் செல்வோம். நான் அடித்துவிட்டு ஓடுவேன். அவள் சந்தி என்றும் பாராமல், கோப்பாய்ச் சந்தியில் துரத்தி வந்து அடித்துவிட்டே திரும்புவாள்.

ஒரு நாள் இரண்டுபேரும் துரத்துப்பட்டுக் கொண்டு கோப்பாயில் ஒரு அப்புவின் வாழைத் தோட்டத்துக்குள் சென்றோம். நான் முதலில் சென்று, களைத்துப்போய், "அப்பு தண்ணி தாணை" என வாங்கிக் குடித்துக்கொண்டிருக்க இவளும் களைத்துப்போய் வந்தாள். "எனக்கும் தண்ணி தா மணி" என்றாள். நானும் தண்ணீரைக் கொடுத்துவிட்டு "எனக்கு அடிக்காதை மணி" என்றேன். அவள் சிரித்துவிட்டு, "வா பேசுக்குக் போவம்" என்றாள்.

கோப்பாய் பாலத்தடியில் அடிக்கடி உலங்கு வானூர்தி தாழப் பறக்கும். அந்நேரங்களில் நாம் கிறேசரடிக்கு விரைந்து செல்வோம். இவ் வேளைகளில் மதில்களைப் பாய்ந்து, பாய்ந்து முதலில் கிறேசரடிக்குச் செல்பவள் மாலதிதான். மாலதி மதில் பாய்வதில் சரியான கெட்டிக்காரி. "இந்தா பார் போறன்" என்றால் அடுத்த நிமிடம் மதிலுக்கு அங்கால் நிற்பாள்.

கொக்கோக்கோலாவும் பன்ராவும்

எங்களுக்குக் 'கொக்கோக்கோலா குடிக்க கூடாது' என்ற கட்டளை பிறப்பிக்கப்பட்டிருந்தது. மாலதிக்குக் கொக்கோக்கோலா என்றால் சரியான பிரியம். கொக்கோக்கோலா குடிக்கக்கூடாது என்று தடைவிதித்த இரண்டாம் நாள் மாலதி என்னிடம் "வாடி கூல்பாருக்குப் போய்வருவோம்" என்றாள். எனக்குத் தெரியும், இவள் கூல்பார் சென்றால் கொக்கோக்கோலாதான் குடிப்பாள் என்று. நான் "வரவில்லை" என்றேன். "இண்டைக்கு மட்டும் வா" என்றாள். "சரி வா. கொக்கோக்கோலா குடிக்கக்கூடாது. வேறு ஏதாவது குடிப்போம்" என்றேன். அந்நேரம் வெளியில் செல்வதென்றால் சாதாரணமானவர்களாகத்தான் உடையணிந்து செல்வோம். கடைக்குள் சென்ற மாலதி இரண்டு பன்ராவுக்கும் இரண்டு கொக்கோகோலாவுக்கும் சொன்னாள். "ஏன் மாலதி"? என்றேன். சிரித்துக்கொண்டே "பன்டாவை மேசையில் வைத்துவிட்டுக் கொக்கோக்கோலாவைக் குடிப்போம்" என்றாள். "என்ன மாலதி விசர்க்கதை கதைக்கிறாய். எங்களையல்லோ கொக்கோக்கோலா குடிக்க வேண்டாம் என்றார்கள். குடித்துக்கொண்டிருக்கையில் யாராவது எமது ஆட்கள் வந்தால் என்ன செய்யிறது?" என்றேன் "இண்டைக்குமட்டும் குடிப்போம். எனிமேல் குடிக்கவே வேண்டாமெடி" என்றாள். சரியென மேசையில் அமர்ந்தோம். "முதலில் பன்டாவை எடுத்து, அரைவாசியைக் குடித்துவிட்டு மேசையில் வைத்துவிட்டு, பின் கொக்கோக்கோலாவை குடி" என்றாள். இடையில் எதிர்பாராதவிதமாக எமது உறுப்பினர் ஒருவர் வந்தார். நாங்கள் இருவரும் கொக்கோக்கோலாவைத் தள்ளிவைத்துவிட்டு, பன்டாவை குடித்துக் கொண்டிருந்தோம். அவர் சென்றபின் மீண்டும் கொக்கோக்கோலாவைக் குடித்துவிட்டு வெளியில் வந்ததும், மாலதி சொன்னாள் "எப்படி மணி என்னுடைய ஐடியா?" என்று. பின் இரவு பொறுப்பாளரிடம் நடந்ததை மாலதி கூறி, தனக்குத் தண்டனை தரும்படி கேட்டாள். இந்தச்சம்பவம் நடந்தது. 1987. 10. 09 இல்.

மாலதி எவ்வவு குழப்படிகளையும் குறும்புகளையும் செய்தாலும், இவளிடம் வீரமும் விசுவாசமும் நிறைந்து காணப்பட்டது. இவள் எவ்வளவு குறும்புகள் செய்தாலும், இவளுக்கெனக் கொடுக்கப்படுகின்ற வேலைகளை அழகாக, முழுமையாக, திறமையாகச் செய்துமுடிப்பாள்.

கடைசி நாள்.

1987- 10- 10 இல்

காலையிலேயே தலையில் தோய்ந்துவிட்டு வந்த மாலதி, சமையல் அறைக்குச் சென்று சாப்பிட்டுவிட்டு வந்தாள். நானும் ஏற்கனவே தலையில் தோய்ந்து எனக்குப் பிடித்தமான ஜீன்ஸ், சேட் போட்டிருந்தேன். மீனுடன் சாப்பிட்டுவந்த மாலதி நான் எதிர்பாராத விதமாக என் சேட்டில் கையைத் துடைத்துவிட்டாள். எனக்குப் பேசவார்த்தையின்றி, அவள்மேல் துப்பிவிட்டேன். அந்நேரம் மாலதி எனக்கு அடிக்கவில்லை. மீண்டும் போய்க் குளித்துவிட்டு வந்தாள். நான் அவளை "என்னுடன் கதைக்கவேண்டாம்" என கூறிவிட்டேன்.

அன்று காலையே எமக்கெல்லாம் புதிய ஆயுதங்கள் கொண்டுவந்து தரப்பட்டன. மாலதிக்கு எம்-16 ஆயுதம் கொடுக்கப்பட்டது. மாலையில் எங்களை ஏற்ற வாகனம் வந்தது. அதில் எங்களுடைய குழுவை உடைப்பைகளுடன் ஏறச்சொன்னார்கள்; நாங்கள் தயாரானபோது ஒரு சின்னப்பிரச்சினை வந்தது. எமது குழுவில் நான்கு எம் -16 இருந்தது. எம் - 16 உடன் உள்ள ஒருவரை வேறுகுழுவுக்குப் போகும்படி பணிக்கப்பட்டது. இதில் இரண்டுபேர் குழுத்தலைவிகள். ஒருவர் மருத்துவம் செய்பவர். ஆகவே மாலதிக்கே அடுத்த குழுவுக்குச் செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டது. "போகமாட்டேன்" என்ற மாலதி, பின் பொறுப்பாளரின் கட்டளைக்குப் பணிந்து, அடுத்த குழுவுடன் நிற்கச் சம்மதித்தாள்.

வாசலில் கண்ணீர் மல்க மாலதி நின்றுகொண்டிருந்தாள். நாங்கள் எமது உடைப் பைகளுடன் வாகனத்தில் ஏறிக்கொண்டிருந்தோம். நான் என்னுடன் கதைக்கவேண்டாம் என்று சொன்னதால், மாலதி எனக்குக் கிட்டேவரவில்லை. வாகனம் புறப்படத் தயாரானபோது, நான் மறந்துபோய் விட்ட எனது சப்பாத்தை எடுத்துக்கொண்டு, ஓடி வந்தாள் மாலதி. கண்ணீர் மல்க என்னிடம் சப்பாத்தைத் தந்த மாலதி, "என்னோடு கதைக்கமாட்டியா மணி?" என்றாள். "இல்லை. நான் கதைப்பேன். கோபத்திலைதான் அப்பிடிச் சொன்னேன்" என்றேன். நாங்கள் சண்டைக்குத் தயாராகுகின்றோம் என்பது எமக்குத் தெரியும். மாலதி சொன்னாள் "கவனமாக நல்லா அடிபடு மணி. இருவரும் உயிருடன் இருந்தால் மீண்டும் சந்திப்போம்" என்றாள். இதுதான் மாலதி பிரிவின் துயரத்தோடு இறுதியாக எனக்குச் சொன்ன உறுதியான வார்த்தைகள். இறுதியாக நான் கண்ட மாலதியில் குழந்தைத்தனம் தெரியவில்லை. மாறாக போருக்குத் தயாரான கம்பீரமான படைவீரனின் சாயல் அவள் முகத்தில் படிந்திருந்தது. நாங்கள் மாலதிக்குக் கை அசைக்கவும், எங்களை ஏற்றிய வாகனம் அவள் கை அசைத்தபடி நிற்க, பறந்து சென்றது.

மாலதியைப் பிரிந்த கவலை எனக்குமட்டும் இருக்கவில்லை. எங்கள் குழுவுக்கே இருந்தது. ஏன் என்றால் அவள்தான் எங்கள் குழுவில் கலகலப்பானவள். பயிற்சிப் பாசறையில் இருந்து ஒரே குழுவில் இருந்த எங்களுக்கு, பிரிவு என்று வந்ததும் மிகவும் கடினமாக இருந்தது. வாகனம் போய்க் கொண்டிருந்தது. என் மனம் வாகனத்தை விட வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. என் உள்ளுணர்வு கூறியது நான் மாலதியை நிரந்தரமாக பிரிந்து விடுவேன் என்று.

1987 - 10 10 அன்று நள்ளிரவில்......

கோப்பாயில் எம்மவருக்கும், இந்திய இராணுவத்துக்குமிடையே சண்டை தொடங்கிய செய்தி கிடைத்தது. தொலைத்தொடர்பில், சண்டையின் செய்திகளையும் பணிப்புரைகளையும் கட்டளைகளையும் பொறுப்பாளருடன் இருந்து கேட்டுக் கொண்டிருந்தேன். திடீரெனத் தொலைத்தொடர்பில், ஒரு குழு, இன்னொரு குழுவுக்குப் பெண் போராளிகளில் ஒருவர் வீரச்சாவு என்ற செய்தியைத் தெரிவித்தது. எனக்கு ஒரு மாதிரி இருந்தது. நீண்டநாள் நட்புறவால் மனம் சொன்னது "ஆண்டவரே மாலதியாக இருகக்கூடாது" என்று. பொறுப்பாளரைக் கரைச்சல் பண்ணினேன். "பெயர் என்ன என்று தொடர்பு எடுத்து கேளுங்கோ, கேளுங்கோ" என்று. திடீரெனத் தொலைத் தொடர்பு, வீரச்சாவடைந்தது மாலதி என்ற செய்தியைத் தாங்கி வந்தது.

நானோ, என்றுமே சந்தித்திராத அதிர்ச்சியைச் சந்தித்தேன். ஏனெனில் பெண்போராளிகளில் முதல் முதலில் இவளின் இழப்பைத்தான் நான் சந்தித்தேன். 'ஓ' வெனப் பெரிதாக, நான் எங்கே நிற்கிறேன் என்ற நினைவுகூட இல்லாமல் அழுதேன். பொறுப்பாளர் சிறிது நேரத்துக்குப் பின் என்னை ஏசினார். "எங்கே நிற்கிறாய் என்று தெரியாமல் ஏன் இப்படிச் சத்தமாய் அழுகின்றாய்" என்று. என்றுமே பொறுப்பாளரை எதிர்த்துக் கதைக்காத நான், மாலதியின் பிரிவால் அன்று பொறுப்பாளரையே எதிர்த்துக் கதைத்துவிட்டேன்.

மாலதி தினமும் சொல்வாள், பெண்புலிகளில் நான்தான் முதல் வீரச்சாவு அடைவேன் என்பாள். அவள் சொன்னதைப் போலவே, மாலதியே விடுதலைப் புலிகளின் போராட்ட வரலாற்றில் முதல் பெண்புலியாக, புரட்சிப் பெண்ணாக சரித்திர நாயகி ஆகிவிட்டாள்.

நானும், மாலதியும் கோப்பாயில் கிறேசரடி என்னும் இடத்தில் நடந்து திரிவோம். அவள் எதிரியை எதிர்கொள்ளக் காத்திருந்த, நடைபயின்ற, குறும்புத்தனங்கள் செய்த அதே இடத்தில் எதிரியின் குண்டை ஏந்தி, சரித்திர நாயகியாகச் சரிந்தாள். இவள் உலவிய, இவள் சரித்திர நாயகியாகிச் சரிந்த அதே இடத்தில் அவளுக்காகக் கட்டப்பட்ட கல்லறை நிமிர்ந்து, அவளின் வீரத்தை, பசுமையான அவளின் நினைவுகளை உணர்த்தி நிற்கின்றது.

இப்படித்தான் மாலதி வீரச்சாவைத் சந்தித்துக் கொண்டாள். அன்று இரவு கோப்பாய் கைதடி வீதியாக வரும் வாகனங்கள் அனைத்தையும் மறித்துப் பரிசோதனை செய்யும்படி மாலதி நின்ற குழுவினரிடம் பணிக்கப்பட்டிருந்தது. எல்லோருமே காவற்கடமையில் நிற்கும்போது வருகின்ற வாகனம் ஒவ்வொன்றையும் பரிசோதனை செய்து அனுப்பினார்கள்.

கோப்பாய்ச் சுடலையடியில் மாலதி காவற்கடமையில் நின்றபோது, வாகனங்கள் வந்திருக்கின்றன. ஓடிச்சென்று வாகனத்தை மறித்திருக்கிறாள். மாலதி மறித்தது இந்திய இராணுவத்தின் ஆமட்கார்களை. திடும் திடுமெனக் குதித்த இராணுவத்தினர் ரவைகளை கண்டபாட்டில் அடிக்கத் தொடங்கினர். மாலதியும் எதிர்த்தாக்குதலைத் தொடுத்தாள். பின் எமது எல்லாக் குழுவினரும் மாலதியின் பக்கம் சென்று சண்டையில் இறங்கினர். எதிர்பாராத விதமாக ஏராளமான இராணுவத்தினர் எம்மவரது குழுவைச் சுற்றிவளைத்தனர். தாக்குதலைத் தொடுத்தனர். இவ்வேளையில் மாலதி படுகாயமடைந்துவிட்டாள். காயமடைந்தவளைத் தோழிகள் தூக்கி வரும் போது மாலதி "எல்லோரும் வீணாகச் சாகவேண்டாம். என்னை விட்டுவிட்டு என்ர எம் 16ஐ (ஆயுதம்) கொண்டு நீங்கள் ஓடுங்கோ" என்றிருக்கின்றாள். தோழிகள் "இல்லை. நாங்க உன்னைக் கொண்டு போகின்றோம்" என்று கூறிய அடுத்த நிமிடமே மாலதி சயனைட்டைக் கடித்துவிட்டாள், ஏனென்றால் இராணுவத்தினர் சுற்றிவளைத்துவிட்டனர். கோப்பாய் கிறேசரடியில் மாலதி தன்னை அர்ப்பணித்தாள். ஆமியின் சுற்றிவளைப்பால், மாலதியின் ஆயுதத்தைத்தான் முதலில் கொண்டு வந்தார்கள். மாலதி சொன்னதுபோல், அடுத்த நாள்தான் மாலதியின் புகழுடலை மீட்டெடுத்தார்கள்.

இப்படித்தான் ஒவ்வொரு போராளிகளும் எங்களின் சொந்தமண்ணின் விடிவுக்காகத் தங்களை அர்ப்பணித்துக்கொள்கின்றார்கள். எல்லாப் போராளிகளும் தங்கள் உயிருக்கும் மேலாகத் தங்களின் ஆயுதங்களைத்தான் நேசிக்கின்றார்கள். இந்த வரிசையில் மாலதியும்.........

கோப்பாய் கிறேசரடியில் மாலதியின் பசுமையான நினைவுகளைத் தாங்கி நிற்கும் அவளது கல்லறைக்கு அடிக்கடி என் கால்கள் விரையும். அங்கிருந்து நான் திரும்புவது உரமேறிய உறுதியான போராட்ட உணர்வோடு மட்டுமே.......




**1987. 10. 10.**

ஊர் அமைதியாக உறங்கிக்கொண்டிருக்கின்றது. விண்மீன்கள்மட்டும் எம் வீரர்களுடன் சேர்ந்து விழித்திருக்கின்றன. எங்கும் ஒரே நிசப்தம் நேரம் 1 மணி 15 நிமிடம்.

திடீரென்று அமைதியைக் குலைத்தவண்ணம் டுமீல்... டுமீல்... என வேட்டொலிகள் முழங்குகின்றன ஓர் நொடியில் அமைதி குலைந்தது. மீண்டும் போர் தொடங்கிவிட்டது. அமைதி காக்கவென வந்தவர்கள், எமது மண்ணை ஆக்கிரமிக்கும் நோக்கில் போரைத் தொடங்கிவிட்டார்கள்.

கோப்பாய் - கைதடி வெளியில் இந்தியஇராணுவத்துக்கெதிராக முதலாவது சண்டை நடைபெற்றுக்கொண்டிருக்கின்றது.

சண்டை உக்கிரமாக நடக்கின்றது. சண்டையில் எழும் வேட்டுச்சத்தங்கள் காற்றோடு காற்றாகக் கலந்து, தமிழீழம் எங்கும் 'சண்டை தொடங்கி விட்டது' என்பதைத் தெரிவித்துக்கொள்கின்றது.

அதேவேளை, காற்றில் மிதந்து வருகின்றது அந்தச்செய்தி ......

"நான் காயப்பட்டிட்டேன். என்ர ஆயுதத்தைப் பிடியுங்கோ. என்ர ஆயுதத்தைக் காப்பாற்றுங்கோ"

ஒலித்துக்கொண்டிருக்கும் ரவைகளினதும், குண்டுகளினதும் ஓசையினூடே மாலதியின் குரலும் சேர்ந்து ஒலிக்கின்றது.

இராணுவத்தின் தாக்குதலுக்கு எதிர்த்தாக்குதல் நடத்திக்கொண்டிருக்கும் தோழிகளின் செவிகளில் மாலதியின் அந்தச் செய்தி......

எதிர்த்துவரும் ரவைகளினூடே விஜி மெல்லத் தவழ்ந்து சென்று தோழியைக் காப்பாற்றும் பணியில்...

என்ர ஆயுதம் பத்திரம். என்னை விட்டிட்டு என்ர ஆயுதத்தைப்பிடி விஜி"

"ஓ! நான் ஆயுதத்தைப் பிடிக்கிறேன். முதலில நீ வா மாலதி"

"நான் சொல்லுறதை முதலில கேள்"

"இல்லை. நீ வா முதலில"

ரவை மழையின் நடுவே தோழிகள் இருவரினதும் வாக்குவாதம் தொடர்கின்றது.

"முதலில என்ர ஆயுதம் பத்திரம் விஜி. நீ முதலில அதைப்பிடி"

மாலதியின் வேண்டுகோளைத் தொடர்ந்து, விஜி ஆயுதத்தைப் பெற்றுக்கொள்கின்றாள்.

"சரி கொண்டு போ. நீ ஓடித்தப்பு விஜி"

"இல்லை. நான் உன்னை விட்டுட்டுப் போக மாட்டன். நீயும் என்னோட வா"

"என்னை விடு. சொன்னால் கேள், வீணாகக் கஷ்டப்படாத. நான் குப்பி கடிச்சிட்டன். இப்படியே விட்டுட்டு என்ர ஆயுதத்தைக் கொண்டு போ விஜி"

"நீ ஏ...ன்...குப்...பி...க...டி... ச்...சனி...? நான் உன் ...னை...க் கா...ப்...பா...ற்...றுவன். நா...ன் போ...க...மாட்டன்..."

துக்கம் தொண்டையை அடைத்துக்கொண்டாலும், உறுதியுடன் தோழியை எப்படியும் காப்பாற்றிவிடவேண்டும் என்ற துடிப்பில் சக தோழிகள் பாதுகாப்புக் கொடுக்க, அந்த ஆபத்தான சூழலிலும் மாலதியின் கைகளைத் தன் தோளில் போட்டு அவளை அணைத்துக்கொண்டு விஜி மெல்ல மெல்ல வருகின்ற வேளை,

"எல்லாரும் என்னை விட்டிட்டு, என்ரை ஆயுதத்தைக் கொண்டு போங்கோ. இனி நா...ன் ந ப்...ப மாட்...ட...ன். என்ரை ஆயு...த...த்...தை க் கொ...ண்...டு போங்......"

"என்ரை ஆயுதம் பத்திரம். என்னை விட்டிட்டு என்ரை ஆயுதத்தைக் காப்பாற்றுங்கோ".

இது தான் மாலதியின் வாயிலிருந்து கடைசியாக உதிர்ந்த வார்த்தைகள்.

ஆம்!

எமது போராளிகள் தம் உயிரிலும் மேலாக ஆயுதத்தை நேசிப்பவர்கள். அதனால் தான் அன்று மாலதி தன் சாவிலும்......

தமிழீழத்தின் விடிவுக்காய், கோப்பாய் - கைதடி

## 2-ம் லெப். மாலதி



பேதுறு சகாயசீலி

ஆட்காட்டிவெளி, மன்னார்.

பிறப்பு: 1967-01-04 வீரச்சாவு: 1987-10-10

வெளியில் 'புலிகளின் முதல் பெண் மாவீரர்' என்ற பெருமையுடன், மாலதி தமிழீழ மண்ணை அரவணைத்துக் கொண்டு இன்றுடன் ஆறு வருடங்கள்

**மிதுலா**

ஆகிவிட்டன. ஆனாலும் அவளுடைய கனவுகளும், நினைவுகளும்என்றும் எம் மண்ணில், மனங்களில்...

சிரித்த முகம், சிறிய முகம், துடி துடிப்பான செயல், எதையும் செய்து முடிக்கும் திறன், புத்தி சாதுரியமாகச் செயற்படும் விவேகம். அன்பாகவும், பண்பாகவும் மற்றவர்களுடன் பழகும் தன்மை, இலகுவில் எதையும் புரிந்துகொள்ளும் ஆற்றல் இவையனைத்தும் ஒருங்கே அமையப்பெற்ற சிறுமியாகவே அவளை எமது இயக்கம் சந்தித்தது. அப்பொழுது அவளுக்கு வயது பதினேழுதான்.

அவளை இயக்கம் சந்தித்தகாலம் வித்தியாசமானது. ஆபத்து நிறைந்தது. சிறீலங்கா இராணுவத்தின் ஆக்கிரமிப்புக்கும், அடாவடித்தனங்களுக்கும் எமது மண் ஆட்பட்டிருந்தது. அந்தக் காலம்...

"ஆமி வாறானாம்"

"என்ன? ஆமி வாறானோ...?"

புகைந்துகொண்டிருந்த அடுப்புக்கள்மாத்திரம் புகைந்துகொண்டேயிருக்கும். அடுப்பில் வைத்த கறி அப்படியே இருக்கும். நின்ற நின்றபடி எதையும் தூக்க கை இயங்காது.

"பிள்ளையள் ஓடிவாங்கோ... ஆமி வாறானாம். அக்கா ஓடிவாங்கோ... தம்பி ஓடி வாங்கோ. அம்மா மெல்ல ஓடிவாணை... கெதியா வாங்கோ..."

இன்னும் யார் யாரையோ எல்லாம் அழைத்தபடி, உயிரைக் கையில் பிடித்தபடி, 'பிள்ளைகளைக் காப்பாற்றிப்போடோணும், பொருள் போனால் போகட்டும், உயிர் இருந்தால் காணும்' என்ற மட்டில், வீட்டில் நிற்பவர்கள் தப்பிவிடவேண்டும் என்ற நோக்கில், ஓடிக் காட்டில் ஒளிந்துகொண்டிருந்தாலும், அவர்களின் மனங்களில் நிம்மதி இருக்காது.

"தம்பி பாரடா, ஆச்சி வந்திச்சுதோ? அண்ணன் வந்தானோ, அப்பா வந்தாரோ"

'என்று அந்தக் காட்டிலும், ஒருவரை ஒருவர் ஏக்கத்துடன் தேடும் படலம் தொடரும்.

"அம்மா! அப்பாவைக் காணேல்ல"

"என்ன? அப்பாவைக் காணே......வி......ல...யோ?"

அவள் மனம் அதிரும். கண்களில் நீர் ஓடும். ஆனாலும் உறுதியுடன் காடுகள் எங்கும் கணவனைத்தேடி கண்கள் அலையும். குழந்தைகளின் மனங்கள் அப்பாவை நினைத்துக் கலங்கும். விழிகள் வெறுமையாக எல்லோரையும் சுற்றிச் சுற்றிப் பார்க்கும்.

"கவலைப்படாதேங்கோ", "பயப்படாதேங்கோ", "அவருக்கு ஒன்றும் நடக்காது" என்றவர்களின் ஆறுதல் மொழி கேட்டுத் தாயின், பிள்ளைகளின் விழிகளில் நம்பிக்கை ஒளி படரும்.

"ஆமி போட்டானாம்"

"ஆ... போட்டானோ?"

"அப்பாடா!" நிம்மதிப் பெருமூச்சு நீண்டு ஒலித்தாலும், மறுகணம் நெஞ்சு...

"ஆருக்கு என்ன நடந்திச்சுதோ? வீடு எப்படியோ? என்ன செய்தாங்களோ?" என ஏக்கம் நெஞ்சை நெருட...

"கடவுளே! ஆண்டவரே! ஆருக்கும் ஒண்டும் நடந்திருக்கக்கூடாது. எதுவுமே எங்கும் நடந்திருக்கக்கூடாது" என்ற பிரார்த்தனையுடன் காட்டை விட்டு வெளியே வந்தால்...

வீதியில் கணவன் சுடப்பட்டு... அண்ணன் சுடப்பட்டு... ஆச்சி சுடப்பட்டு .. அயலவன் சுடப்பட்டு... இன்னும் யார் யாரோ எல்லாம் சுடப்பட்டுப் பிணமாக...

வீடுகள், வேலிகள் எரிக்கப்பட்டு, இடிக்கப்பட்டு, மண்மேடு சாம்பல் மேடுகளாக...

சிரித்த வயல் வெளி எங்கும் சிதைந்து கிடக்கும்.

தமிழீழ மக்களின் மனங்களில், எந்நேரம் என்ன நடக்குமோ என்ற ஏக்கப் பெருமூச்சு. திடீர் என சிங்கள ஓநாய்களின் சுற்றி வளைப்பு. சுற்றிவளைப்பில் 'புலிகள்' என்ற போர்வையில் அப்பாவிப் பொதுமக்கள் கைது. இன்று சிரித்தவர் நாளை பிணமாக. பள்ளிக்குச் சென்றவர்கள் கம்பிகளுக்குப் பின்னே அழுத முகத்துடன். பச்சைப் பசேலென பரந்து கிடக்கும் வயல் வெளி எங்கும் பச்சை பேய்கள் அட்டகாசமாக. தமிழீழ மண் எங்கும் சிங்கள இனவெறி அரசின் கோரத்தாண்டவம்.

எல்லாத் துயரங்களையும் சுமந்த நெஞ்சு "நாளை விடியும்" என்ற உறுதியுடன் வாழ்க்கையைத் தொடரும்.

இப்படியான ஆபத்தும் சிக்கல்களும் நிறைந்த காலகட்டத்தில் மக்கள் வாழ்ந்துகொண்டிருந்த வேளையில்,

எமது இயக்கம் ஆங்காங்கே சிறிய குழுக்களாகப் பிரிந்து சிங்கள இராணுவத்தினரை 'கெரில்லாத் தாக்குதல்' மூலம் அழித்து, அதிர்ச்சிக்குள்ளாக்கிக் கொண்டிருந்சதுடன், மக்களையும் அரசியல்மயப் படுத்தும் நோக்குடன் போராட்டத்தைப்பற்றியும், போராட்டத்தின் தேவைபற்றியும் பிரச்சாரப்படுத் திக்கொண்டிருந்தது.

மன்னாரில் பரப்புக்கடந்தான் என்னுமிடத்தில் நாலைந்து பேரைக் கொண்ட எம்மவரின் குழு ஒன்று தலைமறைவாக தற்பாதுகாப்புக்கெனவுள்ள ஒரு சில ஆயுதங்களுடன் பிரச்சார வேலைகளிலும் இராணுவத்தினர் மீதான கெரில்லாத்தாக்குதல்களிலும் ஈடுபட்டுக்கொண்டிருந்தது.

அன்றைய சூழ்நிலையில் இராணுவ நடவடிக்கைகளுக்கும் ஏனைய இதர தேவைகளுக்கும் ஏற்ற இடமாக பரப்புக்கடந்தான் பிரதேசம் அமைந்ததால் காலை முதல் மாலைவரை பரப்புக்கடந்தான் பிரதேசத்தில் தமது பொழுதைக் கழித்துக்கொள்ளும் எமது குழுவினர் இரவு ஆனதும் பாதுகாப்புக்கென ஆட்காட்டி வெளியினை நாடுவர்.

அன்றைய காலகட்டத்தில் இராணுவத்தை நேருக்குநேர் எதிர்கொள்ளுமளவுக்கு, ஆயுதபலமோ, ஆட்பலமோ எம்மிடம் இருக்கவில்லை. ஆங்காங்கே சிறு சிறு கெரில்லாத் தாக்குதல்களை நடாத்திவிட்டு, உடனேயே தலைமறைவாகிக்கொள்ளும் காலம்.

எனவே எமது குழுவினர் பாதுகாப்புக்கருதி இரவில் ஆட்காட்டி வெளிக்கு வந்துவிடுவார்கள். அநேகமாக பரப்புக்கடந்தான் மக்களும் அப்படியொரு! வாழ்க்கையையே ,வாழ்ந்துகொண்டிருந்தார்கள்.

எதிர்காலம் எப்படி இருக்குமோ, நாம் எப்படி வாழப்போகிறோமோ என ஏங்கிக் கொண்டிருந்த மக்களின் மனங்களில், எமது இயக்கத்தினரின் தாக்குதல்களும், பிரச்சாரமும் விழிப்புணர்வையும் நம்பிக்கையையும் ஏற்படுத்தியது.

பரப்புக்கடந்தானில் இருந்து ஆட்காட்டிவெளிவரை மக்கள் எமது இயக்கத்தை ஆதரவளித்து அரவணைத்தனர். அன்று அந்த மக்களின் அரவணைப்பு எமது இயக்கத்தினர் ஓர் நிலையான இடத்தை அங்கு ஏற்படுத்திக் கொள்ள ஏதுவாக அமைந்தது.

நாளும் ஒரு வீடு என எமது இயக்கத்தினர் மக்களிடம் வீடு வீடாகச்சென்று மக்களோடு மக்களாக உறவுகளை வளர்த்துக் கொண்டார்கள்.

ஆபத்தும் சிக்கல்களும்நிறைந்த அப்படியானதொரு காலகட்டத்திலும் பரப்புக்கடந்தானிலிருந்து ஆட்காட்டிவெளிவரை உள்ள அனைத்து வீடுகளும் எமது இயக்கத்தின் பார்வைக்குள்ளாகாது இருக்கவில்லை. எல்லா வீடுகளும் எமது போராட்டத்துக்கு உறுதுணையாக தோளோடுதான் நின்ற வேளை,

ஓர் நாள் அந்த அழகிய ஆட்காட்டி வெளியில் அமைதியோடு அமைந்திருந்த அந்தச் சிறிய வீட்டுக்கு எமது இயக்கத்தினர் காலடி எடுத்துவைத்த போது,

''ஆர் தம்பியவையே? வாங்கோ'' என வரவேற்ற அந்த வீட்டு ஐயாவின் வரவேற்பையும் மீறி, ''அண்ணாக்கள் உள்ள வாங்கோ, வந்து இருங்கோ'' என வரவேற்று இருத்திவிட்டு, ஓடிச்சென்று தேநீருவளையுடன் அளவற்ற சந்தோசத்துடன் எம் இயக்கத்தினர் முன் சிறுமியாக அன்று அறிமுகமாகிய மாலதி, ஆரம்பத்தில் எமது இயக்கத்துக்கு உதவி புரிவதில் பெரும் பங்கு வகித்தவள்.

''அண்ணே! அடம்பனிலிருந்து ஆமி வெளிக்கிட்டானாம். சனம் எல்லாம் காட்டுக்குப்போறாங்கள்'' என ஆமியின் வருகையை உளவு பார்த்துச் சொல்வதுடன் நின்றுவிடாது,

''தங்கச்சி! இண்டைக்குப் பத்துப்பேருக்குச் சாப்பாடு வேணும்'' என எமது இயக்கத்தினர் சொன்னதும், ''அதுக்கென்ன அண்ணை! நான் இந்த நிமிசமே கொண்டு வருகின்றேன்'' என ஓடிச் சென்று, ஒரு நொடியில் சாப்பாட்டுடன் வந்து நிற்பாள். அது மட்டுமல்ல,

''இண்டைக்குக் கூட்டம் ஒன்று வைக்கவேணும், மக்களை அணிதிரட்டவேணும்' என்று ஒரு சொல் சொன்னால் காணும். ஒரு நொடியில் மக்களை அணி திரட்டி, கூட்டத்துக்கு ஒழுங்குசெய்துவிடுவாள்.

வயல்வெளிகளில் எமது இயக்கத்தினர் களைப்புடன் அயரும்வேளை ''அண்ணே, ஆமி வாறான்'' என்று எம்மை அரட்டி, எம் உயிரைக் காப்பாற்றுவதில் பெரும் பங்குகொண்டவள்.

எமது இயக்கத்தினர் சண்டைக்குப் போகும் போதும்சரி, சண்டைசெய்து விட்டு வந்தபின்பும்சரி, மாலதி எம் போராளிகளுக்குச் சாப்பாடு, தண்ணீர் என உபசரித்து எமக்குப் பக்கபலமாக நின்றவள். அவள்மட்டுமல்ல, அவளுடைய அக்கா மணி, ஐயா, ஏன் அவர்களின் முழுக்குடும்பமுமே எமக்குத் தோளோடு தோள் நின்று எமது போராட்டத்துக்கு உறுதுணையாக நின்றவர்கள்.

ஆரம்பத்தில் உளவு பார்த்துச் சொல்வதிலும் கூட்டங்களுக்கு ஒழுங்கு செய்வதிலும், சாப்பாடு, தண்ணீர் எனக் கொடுத்து உபசரிப்பதிலும் பங்கு கொண்ட மாலதியின் மனதில் விடுதலை வேற்று ஆழமாகப் பெருக்கெடுத்து ஓடியது. அவள் விடுதலை வேற்றுப் பெருக்கெடுக்க எமது இயக்க வெளியீடுகள் மேலும் காரணமாயிற்று.

எமது இயக்க வெளியீடுகளை வாசித்து, அதில் சிங்கள இராணுவத்தின் அடக்குமுறைகளையும், அட்டூழியங்களையும் புரிந்துகொண்ட மாலதியின் மனதில், தானும் போய்ப் போராடவேண்டும் என்ற எண்ணம் கருக்கொண்டது. அன்றிலிருந்து அவள் தன்னை ஒரு போராளியாக ஆக்கிக்கொள்ளும்படி எமது இயக்கத்தினரிடம் சதா நச்சரித்துக் கொண்டிருந்தாள்.

அவள் தன்னையும் இயக்கத்தில் சேர்த்துக் கொள்ளும்படி கேட்டுக்கொண்ட காலம், அதை இன்று நினைத்துப் பார்த்தால் ஒருபுறம் சிரிப்பும், மறுபுறம் வேதனையாகத்தான் இருக்கும்.

''இஞ்ச புஸ்பம். ஒரு சங்கதிதெரியுமோ?''

''என்ன மணி? என்ன விசயம்?''

''உவள் ரோகினியைத் தெரியுமெல்லே''

''ஓ... அதுக்கென்ன?''

''அவளுக்கு வீட்டில சாப்பாடு எண்டு எதுவுமில்லை. கண்டபடி றோட்டில திரியுது''

''ஓம்... ஓம்...... எனக்கும் தெரியும். அந்தப் பெட்டையைத் தாய், தகப்பன் ஆம்பிளையன் மாதிரி ஊர் சுத்த விட்டிருக்கு. அந்தப் பெட்டையும் அடக்க ஒடுக்கமில்லாமல் சைக்கிளில் அங்கையும் இங்கையும் ஏதோ சேவை, சேவை எண்டு ஆம்பிளைக்குப் பின்னால திரியுது.''

இதுதான் அன்றைய காலகட்டத்தில் பெண்கள்மீது சமூகம் கொண்டிருந்த கணிப்பு. பெண்கள் என்றால் வீட்டில் அடக்க ஒடுக்கமாக இருக்கவேண்டும், அதை மீறினால் பெண் இல்லை, அவள் ஆண்; அது மட்டுமல்ல ''ஆம்பிளையளுக்குப் பின்னால் திரியுது'' என்று அபாண்டமாகப் பழிகளைப் பெண்கள்மீது சுமத்தி, பெண்களை, அவர்களது உணர்வுகளை அடக்கிக் கொண்டிருக்கும் சமூகம். அப்படியான காலகட்டத்தில் மாலதி தானும் போராட வேண்டும் எனக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

அப்பொழுது எமது இயக்கத்தில் பெண்களை முழுமையாக வீட்டைவிட்டு, போராட எடுத்துக்கொள்ளவில்லை. இருந்தும் 'என்றைக்கோ ஓர் நாள் பெண்களும் எமது போராட்டத்தில் இணைத்துக்கொள்ளப்படுவார்கள். அதுவரையில் காத்திருக்கும்படி' வாக்களிக்கப்பட்டது. அதுவரையில் மாலதி எமது இயக்கத்தினருக்கு வழமையாகச் செய்யும் உதவிகளைச் செய்து வந்தாலும், அவள் மனதில் 'ஆயுதம் ஏந்திப் போராட வேணும்' என்ற விடுதலைத் தீ எரிந்து கொண்டிருந்தது.

காலம் நகர்ந்தது. 1985ம் ஆண்டு ஆயுதப் போராட்டத்தில் பெண்களையும் இணைத்துக் கொள்வது என இயக்கம் முடிவுசெய்தது. பெண்களை இயக்கத்துக்கு எடுத்தபவளை மாலதியும், அவளது அக்கா மணியும் பெண்களை இயக்கத்துக்கு எடுப்பதில் முன்நின்று செயற்பட்டார்கள்.

அவர்கள் பெண்களைப் போராட்டத்துக்குள் எடுப்பதில முன்னின்று உழைப்பதுடன் நின்றுவிடாமல் தாமும் இணைந்துகொள்வதற்கு முனைந்தவர்கள். அணிதிரட்டிக்கொண்டிருந்தவேளை,

மாலதியின் தாயார் மாலதி சிறு பிள்ளையாக இருக்கும்போதே காலமாகிவிட்டார். அவரின் இறப்புக்குப் பின் குடும்பப் பொறுப்பை மூத்த பெண் மணி என்பவர் ஏற்றுக்கொண்டார். இந்நிலையில் எப்படி மணியை இணைத்துக்கொள்வது? அதுமட்டுமல்ல ஒரு வீட்டில எப்படி இரண்டு பேரைப் போரா

பாதுகாப்பற்ற பெரு வெளி. நல்ல நிலவு. இவை இரண்டும் எதிரிக்குச் சாதகமாக அமைந்துவிட்டன. ஆனாலும் எம்மவர் விட்டுவிட்டு ஓடிவிடவில்லை. முடிந்தவரை தாக்குதலை நடத்திக்கொண்டிருந்தார்கள். மாலதியின் இரண்டு கால்களிலும் ரவைகள் துளைத்துச் சென்றுவிட்டன. மாலதி இரு கால்களிலும் காயப்பட்ட அந்தவேளைதான், குண்டுகளின், ரவைகளின் ஓசையின் நடுவே மாலதியின் அந்தச் செய்தி.......

''என்ரை ஆயுதம் பத்திரம். என்னை விட்டிட்டு, என்ரை ஆயுதத்தைப் பிடி விஜி''

''ஓ! நான் ஆயுதத்தைப் பிடிக்கிறன். முதலில் நீ வா மாலதி''

''நான் சொல்லுறதை முதலில கேள்''



2ம் லெப். மாலதி வீரவேங்கை விஜி

''இல்லை. நீ வா முதலில''

ரவை மழையின் நடுவே தோழிகள் இருவரினதும் வாக்குவாதம் தொடர்கிறது.

விகளாக எடுத்துக்கொள்வது என எண்ணிய இயக்கத்தினர் மணி அக்காவிடம்,

"அக்கா! நீங்கள் இஞ்ச நிண்டால்தான் எங்களுக்கு நிறைய உதவிசெய்யலாம். இன்னும் பொம்பிளைப் பிள்ளையள இயக்கத்துக்கு எடுக்கவேணும் இந்த முறை நீங்கள் நில்லுங்கோ. அடுத்தமுறை உங்களை அனுப்புறம்" எனக் கூறி சமாதானம் செய்துவிட்டு மாலதியை இயக்கத்தில் இணைத்துக் கொண்டனர்.

அன்று இரவு படகிலேறி எட்டுப்பேர் ஆயுதப் பயிற்சிக்காக இந்தியாவுக்கு அனுப்பப்பட்டுவிட்டார்கள். இந்தச் செய்தி எப்படியோ மாலதிக்குத் தெரிந்துவிட்டது. தெரிந்ததுதான் தாமதம், எமது இயக்கத்தினர் இருந்த இடத்தை நோக்கிச் சென்று,

"என்னை இப்ப இயக்கத்துக்கு அனுப்புங்கோ. இல்லை எண்டால் நான் இஞ்ச இருந்து போகமாட்டன்," என அடம் பிடித்துக்கொண்டிருந்தவள், "எப்பிடி என்னை அனுப்பாமல் எங்கட ஊரில மற்றவர்களை அனுப்புவீர்கள்" எனக் கேள்வி மேல் கேள்வி கேட்டுக்கொண்டேயிருந்தாள்.

"நீங்கள் நிண்டால் தங்கச்சி கொஞ்சம் பொம்பிளைப் பிள்ளையள இயக்கத்துக்கு எடுத்துத் தருவீர்கள். அதுதான் பிறகு அனுப்புவம் எண்டு விட்டனாங்கள்" என்ற பதில் அவளுக்குத் திருப்தி அளிக்கவில்லை.

அவள் "இண்டைக்கே அனுப்புங்கோ. இல்லை எண்டால் நான் போகமாட்டன்", என அடம் பிடித்து நின்றவேளை, ஒன்றும் செய்ய முடியாத எமது இயக்கத்தினர் இரண்டாவது படகில் இந்தியாவுக்கு அனுப்பிவைத்தனர்.

விவசாயத்தையே தமது பிரதான தொழிலாகக் கொண்ட, ஓர் சாதாரணக் குடும்ப வாழ்க்கையை வாழ்ந்துகொண்டிருந்த தம்பதிகளுக்கு ஐந்தாவது பெண் குழந்தையாக 1967ம் ஆண்டு தை மாதம் 4ம் திகதி சகாயசீலி என்ற இயற்பெயருடன் பிறந்தாள். இவளது குடும்பம் பெரியது. ஆறு பெண் பிள்ளைகளையும் ஒரு ஆண் பிள்ளையையும் கொண்டது.

சிறு வயதிலேயே துடிதுடிப்பும், நினைத்ததைச் செய்து முடிக்கும் தன்மையும், எதையும் ஆராய்ந்து பார்ப்பதில் ஆர்வங்கொண்டவளாகவும் விளங்கிய மாலதி ஆண்டான்குளம் றோமன் 'கத்தோலிக்கத் தமிழ்க் கலவன்' பாடசாலையில் தனது கல்வியைப் பெற்றாள்.

பாடசாலையில் கல்வியில் சிறந்த மாணவியாகவும், அதேவேளை விளையாட்டிலும் சிறந்த வீராங்கனையாகவும் திகழ்ந்தாள். ஒருமுறை அவளின் ஊரில் நடைபெற்ற வீதியோட்டப் பந்தயத்தில் முதலாம் இடத்தைப் பெற்ற நிகழ்வு, அவள் ஒரு வீராங்கனை என்பதற்கு ஆதாரமாக உள்ளது.

அவர்களது குடும்பத்தில் மாலதி கல்வியில் சிறந்தவளாக விளங்கினாள். இதனால் அவளுடைய தகப்பனார் அவளை நன்றாகப் படிப்பிக்கவேண்டுமெனப் பெருவிருப்பம் கொண்டு, அவளை ஆர்வப்படுத்தியதுடன் நின்றுவிடாமல், அவளுக்கு வேண்டிய வசதிகளையும் தேவைகளையும் ஏற்படுத்திக் கொடுத்தார்.

தகப்பனாரின் ஊக்கத்தினாலும், அவளது ஆர்வத்தினாலும் பத்தாம் வகுப்புப் பரீட்சை எழுதிவிட்டுப் பெறுபேற்றுக்காகக் காத்திருந்தாள்.

இந்தவேளையில்தான் எமது இயக்கத்தினர் அவளைச் சந்தித்துக்கொண்டு உதவிகளைப் பெற்றதுடன் நின்றுவிடாது, அவளை ஒரு போராளியாகவும் ஏற்றுப் பயிற்சிக்கென இந்தியாவுக்கு அனுப்பி வைத்தனர்.

ஒருவர் முகம் ஒருவர் முன் பின் தெரியாத அந்தப் பாசறையில் மாலதியும் ஒருத்தியாக ஆயுதப் பயிற்சிக்கென அணிவகுத்து நிற்கின்றாள்.

புதிய மனிதர், புதிய இடம், புதிய வாழ்க்கை, எல்லாமே புதியவை.

ஆம்!

பெண்கள் மென்மையானவர்கள், அவர்களால் எதுவும் செய்ய முடியாது என சொல்லிச் சொல்லி வாழ்ந்த வாழ்க்கையை விட்டு "பெண்கள் நினைத்தால் எதையும் செய்யலாம்" என்ற புதிய தத்துவத்துடன் புதிய வாழ்க்கை ஆரம்பமாகியது.

மரம்வெட்டுதல், கொத்துதல், வீடுகட்டுதல், மண்ணை அடிவாரத்திலிருந்து மலையுச்சிக்கு பொதி சுமத்தல், ஓடுதல், துள்ளுதல், பாய்தல் என ஆரம்பமானது பயிற்சி.

ஆம்! பயிற்சியினால் உடல் உரம்பெற்றது. மனம் திடம்பெற்றது.

ஆரம்பப் பயிற்சியின்போது மாலதி சளைக்காது செயற்பட்டாள். தண்ணீர் அள்ளுதல், மரம்வெட்டுதல், வீடு கட்டுதல், பொதி சுமத்தல் என கஷ்டமான வேலைகளைச் செய்வதில் மாலதி முன்நிற்பாள். அவள் என்றும் தயங்கியதே இல்லை.

பயிற்சிப் பாசறையில் மாலதி எல்லோரையும் விட வயதில், உருவத்தில் சிறுமியாகவே இருந்தாள்.

அநேகமாகக் காலையிலிருந்து மாலைவரை ஓரே ஓயாத பயிற்சி. இடையில் ஒரு மணித்தியாலம் ஓய்வு கிடைக்கும். எமது போராளிகள் "எங்கு ஓய்வு கிடைக்கும், நித்திரை செய்யலாம்" எனக் காத்திருப்பார்கள். ஆனால் மாலதிமட்டும் இந்தவிடயத்தில் வித்தியாசமானவள். 'எங்கு ஓய்வு கிடைக்கும், விளையாடலாம்' எனச் சிறு பிள்ளைபோல் காத்திருப்பாள். அநேகமாக ஓய்வு நேரத்தில் எல்லோரும் நித்திரை செய்யும்போது, மாலதி மரத்தில் ஊஞ்சல் கட்டி ஆடிக்கொண்டிருப்பாள். அந்தளவுக்கு அவள் குழந்தையாகவே இருந்தாள்.

ஒருநாள் அவள் ஊஞ்சல் ஆடிக்கொண்டிருந்தபோது மரக்கொப்பு முறிந்துவிழுந்து, அவள் கால் சுளுக்கிக்கொண்டதுடன் நோவும் ஏற்பட்டது. அன்றிலிருந்து அவளால் ஓட முடியவில்லை. இருந்தும் பயிற்சியின்போது ஓடாது நிற்பதில்லை. தன்னால் முடிந்தவரை நொண்டி நொண்டி ஓடுவாள். பயிற்சியின்போது இப்படியொரு நிகழ்வு அவளுக்கு ஏற்பட்டதால் பயிற்சிகளைத் திறமையாகச் செய்ய முடியாது போய்விட்டது. ஓடுதல், துள்ளுதல், பாய்தல் என்பனவற்றைச் சரியாகச் செய்யமுடியாமல் போனாலும், உடற்பயிற்சி, குறிபார்த்துச் சுடுதல் என்பனவற்றில் தனது திறமையை வெளிக்காட்டினாள். தன்னால் முடிந்தவரை பயிற்சிகளைச் செய்தாள்.

பயிற்சிப் பாசறையில் பயிற்சியைவிட விளையாட்டு, கலைநிகழ்வு போன்றவையும் நடைபெறுவது வழக்கம். விளையாட்டில் ஆர்வம் இருந்தபோதும் அவள் கால் நிலைமை அவளை விளையாட முடியாது ஆக்கிவிட்டது. நிகழ்ச்சிகளைப் பொறுத்தவரை மாலதிக்கு மேடைகளில் ஏறி நடிப்பதில், கலைநிழச்சி செய்வதில் வெட்கம். திறமைகள் இருந்தபோதும் அவளுடைய கூச்ச சுபாவம் அவளது திறமைக்குத் தடையாக இருந்தது. தான் மேடையில் ஏறமாட்டாள் ஆனால் மற்றவர்கள் எப்படி நடிக்கவேண்டும், எப்படி என்ன செய்யவேண்டும் என ஆலோசனைகளை வழங்குவாள். எல்லோருடனும் அன்பாகவும் பண்பாகவும் பழகுவாள். அவள் எதையுமே முடியாது என்று சொல்லிவிட்டு இருந்துவிடுவதில்லை. 'எதுவும் முடியும். முடியாதது என்று எதுவும் இல்லை' என்பாள் அவள். அவளால் முடியாவிட்டாலும், செய்துமுடிக்கும் துணிவுகொண்டவள்.

மாலதியின் குடும்பம் அந்த ஊரிலேயே ஒரு உழைப்பாளர் குடும்பம். மாலதி தனது பாடசாலை நாட்கள் தவிர்ந்த ஏனைய நாட்களில் தகப்பனுடன் வயலுக்குச் சென்று, உழுதல், களைபிடுங்குதல், நாற்று நடுதல், அருவிவெட்டுதல் என வயல் வேலைகளைச் செய்வதால் உரம் பெற்ற உடல் அவளுக்கு. மாலதிமட்டுமல்ல, அவளுடைய சகோதரிகளும் அந்தக் காலத்திலேயே 'பெண்கள்' என்று வீட்டில் இராமல், வயலிலே கடுமையாக உழைத்தவர்கள். கடும் உழைப்பினால் உரம்பெற்ற உடல் பயிற்சியின்போது அவளுக்குச் சிரமத்தை ஏற்படுத்தியதில்லை.

பயிற்சியினை முடித்துக்கொண்ட மாலதி 1986ம் ஆண்டு தமிழீழ மண்ணில், ஆயுதப்போராளியாக முதன் முதல் மன்னாரில் காலடி எடுத்துவைத்தாள். சிறிதுகாலம் மன்னாரிலேயே நின்ற மாலதி தன் வீட்டுக்குச் செல்ல மறுத்துவிட்டாள். பின்னர் தோழிகளின் வற்புறுத்தலினால் வீட்டுக்குப் போனாள்.

ஆரம்பத்தில் வீட்டைவிட்டு மாலதி இயக்கத்துக்குப் போனதை அறிந்த அவளது தந்தை, அவளையாவது குடும்பத்தில் நலமாதிரிப் படிப்பிக்கவேண்டும் என்று தான் கட்டியிருந்த கோட்டையை அவள் தகர்த்துவிட்டதை எண்ணிப் பெருங் கவலை அடைந்தார். ஆனாலும் இன்று தன் மகளை ஒரு ஆயுதப் போராளியாகப் பார்ப்பதை இட்டு பெரும் மகிழ்ச்சி கொண்டார்.

1987ம் ஆண்டு யாழ் குடாநாட்டைக் கைப்பற்ற சிறீலங்கா இராணுவம் மிகப் பெரிய திட்டம் ஒன்றைத் தீட்டிக்கொண்டிருந்த அதே நேரம், நாமும் அதை முறியடித்து, யாழ் குடாவை எம்மிடம் தக்கவைப்பதற்கான முன்னேற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தோம். அதன் ஓர் கட்டமாக ஏனைய மாவட்டங்களில் இருந்து போராளிகள் யாழ் குடாநாடுக்கு அழைக்கப்பட்டனர். இந்நிலையில் மன்னாரில் நின்ற மகளிர் அணியும் இங்கே வந்தடைந்தது. இங்கு வந்ததும் மாலதி அங்கம் வகித்த குழு நாவற்குழி நீர்ப்பாசனத் திணைக்களத்தில் அமைந்திருந்த இராணுவ முகாமைச் சுற்றியிருந்த காவலரண்களில் ஒன்றான கோப்பாய் மயானத்தை அண்மிய பகுதியில் அமைக்கப்பட்ட காவலரண்களில் தனது காவற் கடமையை ஆரம்பித்தது. அந்நேரம் அங்கிருந்து இராணுவத்தை முன்னேறவிடாது, இராணுவத்தின் முன்னேற்றத்தைத் தடுக்கும் எல்லா நடவடிக்கைகளிலும் முன்னின்று செயற்பட்டாள்.

இதன் பின்னர் இவளது குழு யாழ் கோட்டை இராணுவ முகாமையும் யாழ் காவற்துறை, விடுதி இராணுவ முகாமையும் சுற்றியிருந்த காவலரண்களுக்கு மாற்றப்பட்டது. அங்கு இராணுவத்தினர் நாட்டுப் பகுதிக்குள் நுழையும் நோக்கோடு தமது முகாமிலிருந்து அடிக்கடி முன்னேற முயற்சிப்பர். அவ்வேளைகளில் எமது இயக்கத்தினர் நடத்தும் எதிர்த் தாக்குதல்களினால் தமது முன்னேற்ற முயற்சியைக் கைவிட்டு, இழப்புக்களுடன் பின்வாங்குவது வழமையாக நடைபெறும் ஓர் நிகழ்ச்சியாகும். யாழ் நகரில் மாலதி நின்றவேளை அவளின் துணிவுக்கு எடுத்துக்காட்டான ஒரு சம்பவம் இன்றும் எம் மனங்களில்... யாழ் கோட்டை காவற்துறை, விடுதி இராணுவ முகாமைச் சுற்றியிருந்த எமது காவலரண்களின் மீது சிறீலங்கா விமானப்படைக்குச் சொந்தமான குண்டுவீச்சு விமானங்கள் குண்டு, எரிகுண்டுத் தாக்குதல்களை அடிக்கடி மேற்கொள்ளும். ஒரு நாள் காலை எட்டு மணியளவில் விமானங்கள் தாக்குதலைத் தொடுத்தபோது, மகளிர் அணியின் காவலரண்களில் மேஜர் சோதியா, ரதி, அனோஜா, மாலதி - ஆகிய நால்வரும் தமது காவலரண்களுக்கு முன்பாக இருந்த தார்வீதியில் அமர்ந்திருந்து விமானத்தாக்குதலை வேடிக்கை பார்த்தவண்ணம் இருந்தனர். மூன்று விமானங்களும் நான்கு குண்டுகளை மகளிரின் காவலரண்களை நோக்கி வீசிவிட்டு மறையவும், இராணுவத்தினர் எமது காவலரண்களை நோக்கி எறிகணைத் தாக்குதல் செய்யத் தொடங்கினர். ஒரு சிறிய நேர இடைவெளியில் எமது காவலரண்களுக்கு முன்பாக இருந்த இடிந்த யாழ் மாநகர சபைக் கட்டிடத்தின் சிதைவுகளின் பின்னால் இராணுவத்தினர் உருமறைப்புக்களுடன் முன்னேறும் முயற்சியில் ஈடுபட்டுக்கொண்டிருந்தனர். எமது காவலரண்களில் நின்றதோ நான்குபேர். இராணுவத்தினரோ நூற்றுக்கும் மேல். நால்வரும் இராணுவ நகர்வைத் தடுப்பதற்காகத் தாக்குதலைத் தொடுத்தனர். கடும் சண்டை நடைபெறத்தொடங்கியது. அந்நேரம் மகளிரின் காவலரண்களுக்கு அடுத்திருந்த காவலரண்களில் இருந்த ஆண் போராளிகளும் தமது தாக்குதலை ஆரம்பித்தனர்.

தாக்குதலின்போது ஒரு ஆண் போராளி பெண் போராளிகளிடம் வந்து, தமது பக்கம் இராணுவத்தினர் கூடியளவு தூரம் முன்னேறிவிட்டதாகக் கூறிக்கொண்டிருக்கும்போது, எதிரியின் துப்பாக்கி ரவை அப் போராளியின் நெற்றியைத் துளைத்துச் சென்றது. நிலத்தில் வீழ்ந்த அப் போராளியைத் தூக்கி, குறிப்பிட்ட சில யார்கள் தூரம் பாதுகாப்பாக பின்னே கொண்டுபோய் விட்டுவிட்டு, அவருக்குரிய ஒழுங்குகளைச் செய்துவிட்டு, மீண்டும் அவ்விடம் வந்த மாலதி தனது தாக்குதலைத் தொடர்ந்தாள்.

இதேவேளை எதிரி வீசிய கைக்குண்டு ஒன்று அனோஜாவுக்கு அருகில் விழுந்து வெடித்ததால் அனோஜாவிடம் இருந்த தொலைத்தொடர்புச் சாதனம் செயலிழந்தது. இதனால் இவர்களின் நிலைப்பாடுபற்றியோ, அடுத்த குழுவினரின் தொடர்புகளைப்பெறவோ, இராணுவத்தினரின் நிலைபற்றியோ யாருடனும் தொடர்புகொள்ள முடியாமற் போய்விட்டது. வெளித்தொடர்புகள் அற்ற நிலையில் தாக்குதல் தொடர்ந்தது... இராணுவத்துக்கும் மகளிர் அணியினருக்கும் இடைப்பட்ட தூரம் குறுகத் தொடங்கியது. மகளிர் தரப்பில் ரவைகள் முடியும் நிலையை அடைகின்றது என்பதைத் தெரிந்ததும், ஒன்றுமே செய்யமுடியாத நிலையில், எதிரியின் கையில் உயிருடன் பிடிபடக்கூடாது என்ற எமது மரபுக்கிணங்க, நால்வரும் தமது கழுத்தில் இருந்த சயனைட் வில்லைகளை வாயினுள் வைத்தவண்ணம், கைவசம் இருந்த ரவைகளை மிகவும் நிதானமாக பாவித்துக்கொண்டிருந்தார்கள். அந்த நேரம் எதிரியின் துப்பாக்கி ரவை ஒன்று மேஜர் சோதியாவின் வாயிலிருந்த சயனைட் வில்லையின் வெளித்தெரிந்த பகுதியைத் தாக்கியது. சயனைட் மருந்து சோதியாவின் முகம் எங்கும் பட்டதால் அவர் மயக்கமடைந்தார். என்ன செய்வதென்றே தெரியாமல் அடுத்த நிமிடத்தைப்பற்றி எல்லோரும் எண்ணிக்கொண்டிருக்கையில் மாலதி செய்த துணிகரச்செயல்.....

(12-ஆம் பக்கம் பார்க்க)

## சிறுகதை

# புதைகுழி வார்ப்புகள்

எனது அறையில் கதிரைக்குள் புதைந்து ராஜம்கிருஷ்ணனின் "கனவு"க்குள் மூழ்கியிருந்த என் கவனம் மறுபடியும் கலைக்கப்பட்டது. புத்தகத்திலிருந்து விடுபட்ட கண்களுக்கு முதலில் தெரிந்தது, எனது அறை வாசலோடு ஒட்டியிருந்த முன் முற்றத்தில், சற்றே எட்டிப்பார்த்ததுபோல மரத்திலிருந்து சரிவாக நீண்ட கிளையில் மலர்ந்திருந்த இரு கடுமையான சிவப்பு நிறம் கொண்ட ரோஜாமலர்கள்தான். அப்போதுதான் பூத்த பொலிவோடு வெகு அழகாக... ஓடிச்சென்று அக்கொப்பையே கைகளால் அணைத்து, மூக்கின்நுனி பூவிதழின் மென்மையைத் தொட்டுணர, நெஞ்சு நிரம்ப நுகரவேண்டும் என என்னுள் எழுந்த ஆசையைக் கடினப்பட்டு அடக்கினேன். வழமைபோல் உணர்வுகள் இலேசாக முரண்டுபிடித்தன.

"ஓடு... ஓடு... பின்னால... பிடி... பிடி..."

மீண்டும் பலபேர் சேர்ந்து கூச்சலிட்டதுபோல் கத்திய பிஞ்சுக் குரல்கள் என் நினைவுகளை ஊடறுத்தன. அந்த மாலை நேரத்து அமைதியை அவை குலைக்க முயற்சித்தாலும் கோபத்துக்குப் பதிலாக வழமைபோல் ஏக்கம்தான் சூழ்ந்துகொண்டது.

அப்போது எனக்குப் பத்து வயதிருக்கும். என்னைவிட இரண்டு வயது பெரியவனான என் அண்ணா பின்னேரமானதும் கிரிக்கெட்மட்டையோடு பக்கத்து வீட்டுக்குச் சென்றுவிடுவான். எனக்கும் கிரிக்கெட் விளையாட ஆசைதான். அண்ணாவைப் போல் 'போலிங்' செய்யவேண்டும், சத்தம் போட்டுக் கைகொட்டித் துள்ளிக்குதிக்க வேண்டும்போல் ஆவலாக இருக்கும். ஆனால் பக்கத்து வீட்டுக்கு ஒரு பெண்பிள்ளைகளும் விளையாட வருவதில்லை. 'யாரும் வராவிட்டால் என்ன? நான் விளையாடுவன்தானே!' என்று ஒருநாள் அண்ணனின் பின் சென்ற என்னை அவன், படலையிலேயே மறித்து,

"விளையாட்டுக் கிளையாட்டெண்டு பக்கத்து வீட்ட வந்தாயோ, ஆக்களெண்டும் பாராமல் உதைச்சுத்தான் அனுப்புவன்"

என்று அடிக்குரலில் மிரட்டியதும் அல்லாமல், அம்மாவையும் அழைத்து,

"அம்மா... இவளைக் கூப்பிட்டு உங்கை வெங்காயம் உரிக்கச் சொல்லுங்கோ. விளையாடப் போறாவாம் விளையாட" என்றான்.

முகம் கறுத்து கண்ணீர் முட்டிய என் விழிகளையும், மூக்கு விடைத்து அடிஉதடு கடித்து அழுகையை அடக்க நான் எடுத்த முயற்சிகளையும் அவதானிக்காது அல்லது அவதானிக்க விரும்பாது, அந்த அலட்சியத்துடன் படலையை அறைந்து சாத்தியபடி வெளியேறினான் அண்ணா. ஆதரவு தேடும் முயற்சியாக அம்மாவின் முகத்தைக் கண்ணீர் முட்டிய விழிகளோடு பார்த்தேன். அம்மா அண்ணாவைக் கூப்பிட்டு இரண்டு அடி கொடுக்க வேண்டும், அல்லது "அண்ணா சொன்னால் என்ன? அவனுக்கு என்ன தெரியும்? நீ இங்கால் வீட்டை போய் விளையாடம்மா" என்றாவதுசொல்லவேண்டும் என்று என் மனம் ஏங்கியது. ஆனால், வழக்கம்போல் மென்மையான, இதமான தொனியில் அம்மா எனக்கு எதையோ விளங்கப்படுத்த முயன்றாள்.

"பொம்பிளைப் பிள்ளையள் கண்டபடி பக்கத்து வீட்டுக்கு விளையாடக் கொள்ளப் போகக்கூடாதம்மா. பிறகு நாலுபேர் நாலுவிதமா, அடக்கமில்லாத பிள்ளையெண்டு சொன்னால் நல்லாயிருக்காதெல்லோ.. நீ நல்ல பிள்ளைமாதிரி இந்தக் கல்லைச் சுண்டி விளையாடு. அல்லது வந்து இந்த வெங்காயத்தையாவது உரி"

கூறிய அம்மாவை கரு கருவென்று ஏறிய கோபமும் கண்ணீரும் மின்னும் கண்களால் உறுத்துப் பார்த்துவிட்டு, எனது கண்ணீரை யாருக்கும் தெரியப்படுத்த விருப்பமில்லாமல் ஓடிச்சென்று அறையைத் தாழிட்டு, மெத்தையில் விழுந்து விம்மத் தொடங்கினேன். அம்மா என்னைப் புரிந்துகொள்ள முடியாமல் புதிரோடு, பரிதாபமாக நின்றுகொண்டிருந்தாள்.

விளையாட்டு விடயத்தில் அன்று ஏற்பட்ட தாக்கம், பெண் என்பதால் எனக்கு மறுக்கப்பட்ட உரிமை, அந்த மனப்புண் வடுவாகி ஆழ்மனதில் பதிந்து, இன்றும் எங்காவது சிறுவர்கள் விளையாடுவதைக் கண்டால் நின்று பார்க்கவேண்டும்போல், அவர்களுடன் சேர்ந்து சிறுபிள்ளைபோல் ஓடவேண்டும்போல், பயமின்றிப் பலமாகச் சிரித்து உரத்த குரலில் கத்திக் குதிக்க, கும்மாளமிடவேண்டும்போல் தோன்றுவதையும், அதைத் தொடர்ந்து என் இயலாத்தனத்தால் என்னை வேதனைகளின் கூறுபட விடாது சூழ்ந்துகொள்ளும் ஏக்க உணர்வினையும் உதறத்தான் முடியவில்லை.

> "இந்தச் சமூக அமைப்பில் எந்த ஒரு பெண்ணும் வளர்க்கப்படுவது இல்லை. அவளுக்கென்றே தயாரிக்கப் பட்ட பிரத்தியேகமான அச்சில் வார்க்கப்படுகிறாள்".
>
> "வார்ப்புகள்" புத்தகத்திலிருந்து...

இப்போதும், சூழ்ந்துகொண்ட ஏக்கத்தை விலக்கப் பெருமூச்சோடு எழுந்து, கையிலிருந்த புத்தகத்தை மேசைமேல் கவிழ்த்துவிட்டு, அறைவாசற்படியில் முற்றத்தைப் பார்த்து அமர்ந்துகொண்டேன். முகத்தில் வந்து மோதிய காற்று கேசத்தை அலையவைத்தது இதமாக இருந்தது. நெற்றியில் விழுந்த கேசச்சுருளை ஒதுக்கியபடி, சிந்தனையை அலையவிடத் தயாரானபோது, வீட்டினுள்ளிருந்த அம்மா "பிள்ளை" என்று அழைப்பது கேட்டது. அம்மாவுக்குத் தெரியும் நான் எங்கேயிருப்பேன் என்று. எனவே பதில் குரல் அவசியமில்லை என்பதுபோல் அம்மாவுக்காகக் காத்திருந்தேன். தேநீர்க் குவளையோடு வந்த அம்மா, என் கையில் அதைத் தந்துவிட்டு,

"ஏன் பிள்ளை அறைக்குள்ளை ஒதுங்கியிருக்கிறாய்? முன்னுக்குப் பெரியப்பா வந்திருக்கிறார். வந்து கதையன். ஒரு சிரிப்பில்லை, சத்தமில்லை. ஏன் பிள்ளை ஒதுங்கிப்போறாய்?"

கேட்டபடியே அம்மா உள்ளுக்குள் சென்றாள். அவளுக்கே தெரியும் இவை பதில் அற்ற கேள்விகள் என்று.

எனக்கு அம்மாவைப் பார்க்கச் சிரிப்பாக இருந்தது. அன்று ...... நான் பெரியவளாகி ஐந்து நாட்களாகியிருக்கும். ஒரு இடமும் வெளியில் விடாமல்

**சாம்பவி**

வீட்டினுள் அடைத்து வைத்திருந்தார்கள். வீட்டினுள்ளும் சுதந்திரமாகத் திரியவிடாது, ஒரு அறைக்குள்ளேயே இருக்கவேண்டும் என்று கட்டாயப்படுத்தினார்கள். நீண்ட இடைவெளிக்குப் பின்னர் இதே பெரியப்பா அன்றும் வந்தார். அவரது குரல் கேட்டதுமே உள்ளே இருந்த நான் துள்ளிக் குதித்துக் குதிரைப் பாய்ச்சலில் ஓடிவந்து, மேசையின் மேல் ஏறி, சப்பாணி கொட்டி அமர்ந்துகொண்டேன். முகத்தில் மகிழ்ச்சி குமிழியிட "பெரியப்பா—" என்று தொடங்கினேன்.

"விஜி ...."

அம்மாவின் குரலிலிருந்த கடுமை என்னை உடனடியாகத் திரும்பிப் பார்க்கவைத்தது. அம்மாவின் கோபத்துக்குக் காரணம் எனக்கு விளங்கவில்லை. ஆனால் நான் ஏதோ பிழையைச் செய்துவிட்டதுபோல் எல்லோரும் என்னைப் பார்த்த குற்றப் பார்வையில் நான் எனக்குள் சுருண்டுகொண்டேன்.

"கெதியா உள்ள போ. மாடு மாதிரி வளர்ந்தது தான் மிச்சம். ஒண்டும் தெரியாது. இன்னும் ஆட்டமும் பாட்டமும் குதிரைப்பாய்ச்சலும்."

அம்மா எரிச்சல் தொனிக்கப் பேசி, பின் பெரியப்பாவிடம் ஏதோ நான் நடந்துகொண்டமுறை தனக்குத்தான் தண்டனை என்பதுபோல்...

"நான் என்ன செய்ய? இன்னும் அவள் சின்னப் பிள்ளைக்கு நிற்கிறாள்"

என்றாள். என் முகத்தை முற்றாகவிட்டு மகிழ்ச்சி தொலைந்துபோக, குழப்பத்தோடும், அவமானத்தோடும், அழுகையோடும் ஓடிச்சென்று என் அறையினுள் நுழைந்தேன். அதன்பின் என் சுபாவத்தில் ஓட்டமுமில்லை; ஆட்டமுமில்லை. என் முகம் சிரிப்பை மறந்தது. ஏன், அந்த அறையைவிட்டு வெளியேற நான் முயற்சிக்கவேயில்லை.

அன்று நான் குழம்பியது இப்போதும் நினைவிருக்கிறது. அண்ணா என்னைவிடப் பெரியவன். ஆனால் அவனைமட்டும் ஓடி விளையாட, இப்போதும் மேசைமேல் உட்கார்ந்து, காலை வீசியபடி கதைக்க அனுமதிக்கிறார்கள். ஏன் என்னைமட்டும் கட்டுப்படுத்துகிறார்கள்? நான் பெரியவளாகிவிட்டேன், அடக்கமாயிருக்கவேண்டும் என்றால், அண்ணா என்னைவிடப் பெரியவனாயிற்றே? அப்படியானால் ஏன் அவனை ஒருவரும் திருத்தவில்லை?

யோசிக்க யோசிக்க அழுகைதான் வந்தது. எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. ஒன்றுமட்டும் நான் விளங்கியது, அவர்கள் எனக்குப் பாரபட்சம் காட்டுகிறார்கள்.

அம்மம்மா சிலவேளைகளில் சாப்பாடு குழைத்துத் தரும்போதும், முதல் கவளத்தை அண்ணாவுக்குத்தான் கொடுப்பார். கேட்டால், "அவன் ஆம்பிளைப் பிள்ளையடி" என்பார். இந்த ஆண் - பெண் விவகாரம் எனக்கு அப்போது புரிவதில்லை.

"இவை என்னை எங்கையோ தெருவில்தான் கண்டு எடுத்திருக்கினம்போல. அண்ணா தான் அவைக்குப் பிறந்தவனாக்கும், அதுதான் பாரபட்சம் காட்டினம்"

என்று எண்ணிக்கொள்வேன். ஆனால் இது மட்டுமில்லையே. முதன் முதலாகக் காட்சிவானொலி வாங்கி வந்தபோதும், அதனை இயக்கும் முறையெல்லாம் எனக்கும் தெரிந்திருந்தாலும், அண்ணாவையும் அப்பாவையும் தவிர, யாரும் அதில் கைவைக்கக்கூடாதென்று சட்டம். ஏனென்றால் நான் இயக்கினால் அது பழுதடைந்துபோய்விடுமாம். இப்படியான நிகழ்வுகள்தான் என்னை மேலும் மேலும் ஒதுங்கச் செய்தன. நான் இவர்களது சொந்தப்பிள்ளை இல்லையோ என்ற ஐயம்தான் வலுவாக அந்தப்பிஞ்சு வயதில் எனக்குள் ஊன்றத் தொடங்கியது. இவ்வுணர்வால் ஏற்பட்ட அந்நியத்தன்மை, தனிமை, உணர்வுகள் ஏற்றுக்கொள்ளப்படாமையினால் ஏற்பட்ட தாழ்வுச்சிக்கல் எல்லாமாகத்தான் என்னை ஓர் கூட்டுக்குள், ஒரு வட்டத்துக்குள் அடக்கி, எனது ஆளுமையை எனக்குள் மாத்திரமே அடக்கப்பண்ணியது.

நினைக்கும்போது நெஞ்சுக்குள் ஏதோ அடைத்துக்கொண்டது. எங்கோ வாசித்ததுபோல் "நான் வளர்க்கப்படவில்லை. ஏற்கனவே சமூகத்தால் பெண்ணுக்கென அமைக்கப்பட்டிருக்கும் அச்சில் வார்க்கப்பட்டேன்' என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிந்தது. ஒவ்வொரு தடவையும், நான் எனக்குப் பிடிக்காத கட்டுக்குள் வார்க்கப்படுகின்றேன் என்பதை உணரும்போதெல்லாம் உண்டாகும் சினத்தை வெளிக்காட்ட வேண்டும், அவர்களது நியாயமின்மையை உணர்த்தவேண்டும் என்றெல்லாம் தோன்றும். ஆனாலும் இதுவரை என் உணர்வுகள் ஏற்கப்படாமையினால் விளைந்த அவநம்பிக்கையும், இதற்கும் ஏதாவது வக்கிரமாகக் கூறி என்னைக் காயப்படுத்திவிடுவார்களோ என்ற பயமும், கருவென்றேறும் கோபத்தை வெளிக்காட்டமுடியாத கையாலாகாத்தனத்தால் முற்றிக்கொண்டு கண்ணில் சேர்க்கும் நீரும் என்னை எதுவும் பேசவிடாமல் செய்துவிடும் முடிவு .. நான் தனிமைப்பட்டு மேலும் மேலும் ஒதுங்கிப்போனேன்.

இலேசாகத் தலையை உதறிக்கொண்டேன். நினைக்க நினைக்க வேதனைதான் அதிகரித்தது. உள்ளுக்குள் அடக்கப்பட்டு ஆழ்மனதில் உயிருடன் அழுத்தப்பட்ட உணர்வுகள், அழுக்கம் தாளாது கொந்தளித்துக்கொண்டிருந்தன. இலேசாகத் தலை பாரமாக இருப்பதுபோல் உணர்ந்தேன். தாங்கமுடியாத ஏக்கமும், எதையாவது தூக்கி வீசமாட்டோமா என்ற கோபமும் சூழ்ந்தன. யாராவது என் அருகில் வந்து இருந்து, என் கைகளைப்பற்றி, "என்னம்மா?' என்று கேட்கமாட்டார்களா, "உனது உணர்வுகள் எனக்கும் புரிகிறது" என்று ஒத்துணரமாட்டார்களா என்றிருந்தது.

(12-ஆம் பக்கம் பார்க்க)

எமது சமூகம் மாறிக்கொண்டிருக்கின்றது. விடுதலைப் போராக வீசிக் கொண்டிருக்கும் வரலாற்றுப் புயல், எமது மண்ணில் காலங்காலமாக நிலைத் திருந்த பழமைவாத விருட்சங்களை வேரோடு பிடுங்கி வீழ்த்தி வருகிறது. எமது மனக்குகையில் குடியிருந்த மூட நம்பிக்கைப் பேய்கள் விரட்டப்பட்டு வருகின்றன. எமது சமூகக் கருத்துலகில் புதிய பார்வை மலர்கிறது. புதிய விழிப்புணர்வு தோன்றிவருகிறது. சமூக உறவுகளில் புரட்சிகரமான மாற்றம் நிகழ்ந்துகொண்டிருக்கின்றது. எமது போராட்டத்தினுள் ஒரு போராட்டமாகப் பெண் விடுதலைப் போர் இன்று முனைப்புற்றுவருகிறது.

**தலைவர் திரு. வே. பிரபாகரன்**



## பு(ற)துநானூற்றுப் பெண்



*தேசத்தின் புதல்வியவள்*
*தேடினாள் விடியலையே.*
*தேசமே பெரிதென்றெண்ணி*
*தானைத் தலைவன் அணி நின்றாள்.*
*புது நானூறு படைத்தளிக்க*
*புலிப் பெண்ணாய் முன் எழுந்தாள்.*
*ஆதிக்க வெறியர் கொட்டம்*
*அழியவே செய்தாள் திட்டம்.*
*இடியென ஒரு பெருஓசை*
*ஈழத்தே உரத் தொலிக்க - எம்*
*சுதந்திர வேள்வி மடிக்கவென*
*சுழன்று இந்தியப் பேய் ஆடியது...*
*வனிதையர் வலிமை பெற வரிந்தாள் வரிப்புலியை.*
*வரலாற்றின் தோன்றலாய் திகழ்ந்தாள் நெறிவழியில்.*
*அடுப்புடன் நெருப்பெனும் அணங்குகள் வாழ்வுதனை*
*அடியோடு மாற்றிட அனலாய் நிலம் வீழ்ந்தாள்.*
*மன்னாரின் முத்தவள். பெண் மனங்களின் சொத்தவள்.*
*தாயக விடிவுக்காய் விதையானாள் கோப்பாயில்.*
*புதுப்பரணி தோற்றுதற்காய் புகுந்த கனலின்பின்*
*புத்துயிர் கொண்ட பெண்ணினம் எழுந்தது அலையெனவே.*
*புதுமைக்கு வழிசமைத்துப் புரட்சிக்கு வித்திட்ட*
*புதுமைப் பெண், மலர்ப்பாதம் போற்றியே தொடர்கின்றோம்.*
*பண்ணிசைப் பாவினிலே பைங்கொடி யென்றுரைத்த*
*எண்ணமதைப் பாரினிலே இல்லா தொழித்தவள்.*
*எம்மினம் போற்றியே ஏற்றிட முதன்மையானவள்.*
*பாவலரும் நாவலரும் பாடி மகிழ்ந்திடச் சிகரமாயினாள்.*

**பொன்னிலா**

## விடியலுக்காய் உதிர்ந்திட்ட முதற்பொறியே!

*பெண்புலிகள் வரலாற்றில்*
*முதற்புலியாய்க் களத்தினிலே*
*வீரச்சாவடைந்த மாலதியே!*
*விடியலுக்காய் உதிர்ந்திட்ட முதற்பொறியே!*
*அடிமைத் தளைகளால் அரணிட்டு,*
*அடுக்களைக்குள் தலைகள் முடக்கப்பட்டு,*
*பெருங்கனல்கள் நீறாகப் பூத்திருக்க,*
*பேதைகளாய்ப் பெண்கள் வாழ்ந்தவேளை,*
*தீப்பொறியாய்ப் புறப்பட்ட பெண்ணம்மா - நீ*
*திடங்கொண்டு எழுந்திட்ட புலியம்மா.*
*சிங்களத்து வெறித்தனங்கள் எம்மினத்தை*
*சிதறடிக்க எத்தனங்கள் எடுத்திருக்க,*
*வெங்களத்தில் நின்று போரிடுவேன் - எதிரி*
*வீழ்ந்திடவே உயிர் கொடுக்க நான் வருவேன் என்று*
*சொன்னதுடன் நிற்கவில்லை புறப்பட்டாய், புதிய அம்பாக.*
*சின்னப் பெண் எனினும் சீறியெழுந்தாய் வேங்கையாக.*
*நெருப்புக்குள் வதங்குபவர்களை*
*நிம்மதியாய் வாழவைக்கும்*
*பொறுப்புணர்ந்து புறப்பட்ட*
*புலிகளின் பாதையிலதான்*
*சரிநிகராய் ஆணுடன் பெண் இணைந்து,*
*சமத்துவ வாழ்வுக்காய்ப் போரிடுவோம் என்றே*
*புறப்பட்டார் புலியாக பெண்கள் அன்று.*
*ஏகாளச் சிரிப்பும் எரிக்கும் வசைகளும்*
*தப்பாமல் சமூகம் வீசிய எறிகணைகள்.*
*முடக்கமதான் பெண்ணின் தலைவித்என்று*
*அடங்கியே வாழப் பழகிய பெண்கள்*
*அஞ்சி நடுங்கிப் பிணைடித்தவேளை,*
*அசையா உறுதியுடன புலியணியிலே நீ சேர்ந்தாய்*
*ஆற்றலதனை விளக்கும் குறியீடுமானாய்.*
*வீட்டுக்குள் பெண்ணை முடக்கிட எழுந்த*
*முடக்கொள்கைமேல வீழ்ந்தது சாட்டையடி—பெண்கள்*
*நாட்டுக்கும் உழைக்கும் வல்லமை கொண்டவர்*
*என்ற பேருண்மை எங்கும் மிளிர்ந்தது.*

**காயத்திரி**



## முதல் வித்து

*முத்துக் குளித்த கடலன்று*
*மோதித் தணிந்தது.*
*உன்னைப் பெற்றதனாலோ?*
*காற்று வீசாத வெளிர் இரவில்,*
*மாலையின் மங்கிய ஒளிர்வில்,*
*வெஞ்சமரின் நடுவில்*
*வெடித்த கடைசிக்குரல்*
*துடிப்படங்கித் தேய்ந்துபோனது.*
*இந்திய இருள்மேகம்*
*ஒடிக்கறுத்த காலவெள்ளம்.....*
*கைநழுவிய கருவியை*
*மறுகரத்திற் பதித்துவிட்டு,*
*முழுதாக மறைந்துவிட்ட*
*மூவிரண்டாண்டுகள்.....*
*பெண்புலியாக,*
*முதற்களப்பலியான*
*மாலதியே,*
*உன்முடிவான பயணத்தில்*
*விடிவானை நோக்கி*
*எத்தனை கால்கள் விரைந்தன!*
*படிமுறைவளர்ச்சியா?*
*விடிவுக்கான பாய்ச்சல்தானே?*
*விழிகள் உயர்ந்தன!*
*எம்மால் முடியும்*
*என்று விழித்துக்கொண்டன.*
*ஆட்காட்டிவெளியைக் கடந்து*
*அகலப் பதிந்த உன்பாதங்கள்*
*தேங்கிநின்ற வாழ்வைத்*
*திசை மாற்றின.*
*ஏங்கிநின்ற விழிகளுக்கு*
*உரமேற்றின.*

**சுதர்மதி**

## சுதந்திரத்தைத்தேடி...

(9-ஆம் பக்கத் தொடர்ச்சி)

இராணுவத்தினர் முன்னேறலாம் என எண்ணி ஓர் இடத்தில் பன்றிக்குட்டிக் கண்ணி புதைக்கப்பட்டிருந்தது. அவள் அதை வெடிக்கவைத்து, இராணுவத்துக்குத் திகிலை ஏற்படுத்தும் நோக்கில் அதை வெடிக்கவைத்தாள். அது பெரிய ஓசையுடன் வெடித்து, அதிர்ந்தது. அந்த வெடிச்சத்தம் மாலதி எண்ணியதுபோலவே இராணுவத்தைத் திகிலடையச்செய்தது. அந்த வெடிகுண்டு இராணுவத்துக்கு சேதம் ஏற்படுத்காது என்று தெரிந்தும், அதன் சத்தம் அவர்களை நிலைதடுமாறச்செய்யும் என்று விவேகத்துடன் சிந்தித்து, செயற்பட்டது பலனைக் கொடுத்தது. இராணுவம் நிலைகுலைந்து பின்வாங்கியது. இந்த இடைவெளியைப் பயன்படுத்தி மயக்கமடைந்த சோதியாவையும், ஏற்கனவே காயப்பட்ட ஆண்போராளியையும் சிகிச்சைக்கு அனுப்புவதற்கு ஒழுங்குகள் மேற்கொள்ளப்பட்டன. மாலதியின் இந்தப் புத்திசாதுரியம் இராணுவரீதியாகச் சேதத்தை ஏற்படுத்தவில்லையென்றாலும், அவர்களை முன்னேறவிடாது தடுத்தது.

இதன் பின்னர் மாலதி யாழ் தொலைத்தொடர்பு நிலைய இராணுவ மினிமுகாம் தாக்குதலில் பங்கேற்று, அதிலும் திறமையுடன் செயற்பட்டாள். இத் தாக்குதலின்போது இவளது இரண்டு கைகளிலும் எறிகணைத்துண்டுகள் தைத்துக்கொண்டன. அவற்றை இவள் பெரிதுபடுத்தவில்லை வைத்தியசாலைக்குச் செல்லாமலே அவற்றைத் தானே பிளேற், ஊசிமுலம் அகற்றிவிட்டு, "எதையும் பெரிதுபடுத்தக்கூடாது. எங்களால் முடிந்தவற்றை நாங்களே செய்யவேண்டும்" என்று அடிக்கடி கூறுவாள். அந்தளவுக்கு அவளிடம் நம்பிக்கையும் மனவுறுதியும் குடிகொண்டிருந்தன.

இதன் பின்னர் 1987 ம் ஆண்டு ஒப்பந்தத்தின் பின்னர் சிறிது காலம் அரசியல் வேலை செய்யுமாறு மாலதி பணிக்கப்பட்டாள். இவ்வேளை அவள் பளைப பிரதேச மக்களுடன் மிகவும நெருக்கமாகப் பழகி, மக்களோடு மக்களாக நின்று, பிரச்சார வேலைகளில் ஈடுபட்டாள். ஒருமாதமளவில் அவள் வேலை செய்தாள். மீண்டும் இராணுவ நடவடிக்கைகளுக்காகத் திருப்பி அழைக்கப்பட்டாள்.

மாலதியின் இறுதி அத்தியாயம் இப்படித்தான் அமையும் என்று யாருமே நினைத்திருக்கவில்லை. ஆனால் அவள்மட்டும் எப்போதும், "நான்தான் தமிழீழத்தின் முதல் பெண் மாவீரர்" என்று அடிக்கடி சொல்லுவாள். அவள் சொன்னது போலவே அவளுடைய அத்தியாயம் எழுதப்பட்டது.

இந்திய இராணுவத்துக்கும் எமக்கும் இடையில் மோதல் ஆரம்பமாகியது. "இனி என்ன, சண்டைதானே? சாகிறதிற்கு முன்னம் படம் எடுக்கவேணும். படம் எடுப்பம்" என தன் தோழிகளுடன நின்று படம் பிடித்துகொண்டாள். அன்று என்றும் இலலாதவாறு எல்லோருடனும் கலகலப்பாக, மிகவும் சந்தோசமாக, அடித்து, ஓடிப்பிடித்து, துள்ளித திரிநதாள். விதம்விதமான சட்டைகளைப் போட்டு, விதம்விதமாசத் தன்னை அலங்கரித்துப் படம் பிடித்துக்கொண்டாள். வழமையைவிட இவளுடைய செயல்கள் வித்தியாசமாக இருந்தாலும் அதை யாருமே பெரிதுபடுத்தவில்லை. அவளுடன் சேர்ந்து மற்றைய தோழிகளும் படம்பிடித்து, துள்ளி ஓடி, விளையாடி, சந்தோசமாகப் பொழுதைக் கழித்தார்கள்.

இரவு 7.00 மணி.

தொலைத்தொடர்பு சாதனத்தில் அந்தச் செய்திவந்தது.

இந்திய இராணுவத்தை முகாம்களைவிட்டு வெளியேறவேண்டாம் என்று எம்மால் அறிவிக்கப்பட்டுள்ளதாகவும், வெளியேறினால் சுடுவோம் என்றுகூறப்பட்டுள்ளதாகவும், அவர்கள் அதையும் மீறி சாவகச்சேரி - புத்தூர்சந்தியில் இருந்து கைதடி நோக்கி வந்துகொண்டிருப்பதாகத் தமக்குத் தகவல் கிடைத்துள்ளதாகவும், எமது காவலரண்களைத் தாண்டி இராணுவத்தை முன்னேறவிடாது தடுக்குமாறும் உத்தரவு கிடைத்தது.

"அப்ப சண்டை தொடங்கப்போகிறது" எல்லோரும் நினைத்துக்கொண்டார்கள். மகளிர் அணியின் ஒரு குழு கோப்பாய் - கைதடி வெளியில் அமைந்துள்ள கிறேசருக்கு அண்மையில் அமைக்கப்பட்ட காவலரண்களில் நின்று வருகின்ற இராணுவத்தினரைத் தடுப்பதற்குத் தம்மைத் தயார்ப்படுத்தியது. அதில் மாலதியும்நின்றாள். இரண்டு இரண்டு பேராகக் காவல் செய்ய, மற்றவர்கள் காவலரண்களுக்குச் சிறிது தூரம் தள்ளிப் படுத்து உறங்கினார்கள்.

பால்போல நல்ல நிலவு. இரவு 1.00 மணியிருக்கும். பெரிய வெளிச்சத்துடன் வாகனமொன்று காவலரணைநோக்கி வந்துகொண்டிருந்தது வெளிச்சம் கண்களைக் கூசச்செய்தது. மக்களின் வாகனமும் அத்தெருவால் செல்வது வழக்கம் ஆகவே நாம் சரியாக இனங்காணவேண்டும். காவலில நின்ற தோழிகளில்ஒருத்தி ஏனைய தோழிகளை எழுப்பித்தயார்ப்படுத்திவிட்டு, இருவர் அந்த வாகனத்தை நோக்கி விரைந்தனர். அவர்களின் கண்களில் இந்திய இராணுவத்தினரின் உருவங்கள் தெரிந்தன. நாம் அவர்களை இனங்கண்டுகொள்ளக்கூடாது என்பதற்காக பொதுமக்களின் லொறிகளில் மக்கள் என எண்ணும்படி வந்திருக்கின்றார்கள் என்பதை ஒரு நொடியில் புரிந்து கொண்டவர்கள், காவலரண்களுக்கு ஓடிச்சென்று, தாக்குவதற்கு நிலை எடுத்துக்கொள்ள முன், இந்திய இராணுவத்தினர் தாக்கத் தொடங்கினார்கள். இந்தத் திடீர்த்தாக்குதலினால் நிலைகுலைந்த எம்மவர் காவலரண்களைவிட்டு வெளிகளில் ஓடிச்சென்று, நிலை எடுத்து, தாக்குதலை ஆரம்பித்தார்கள்.

பாதுகாப்பற்ற பெரு வெளி. நல்ல நிலவு இவை இரண்டும் எதிரிக்குச் சாதகமாக அமைந்துவிட்டன. ஆனாலும் எம்மவர் விட்டுவிட்டு ஓடிவிடவில்லை. முடிந்தவரை தாக்குதலை நடத்திகொண்டிருந்தார்கள். மாலதியின் இரண்டு கால்களிலும் ரவைகள் துளைத்துச் சென்றுவிட்டன. மாலதி இருகால்களிலும் காயப்பட்ட அந்த வேளைதான், குண்டுகளின், ரவைகளின் ஓசையின் நடுவே மாலதியின் அந்தச் செய்தி ........

மாலதியை, விஜி முடிந்த வரையில் தூக்கிக்கொண்டு வந்து தோழிகளிடம் சேர்த்துவிட்டாள். தோழிகள் அவளைத் தூக்கிக்கொண்டு அந்த ஆபத்தான சூழ்நிலையிலும் கொண்டு செல்ல முயற்சித்தார்கள். முடியவில்லை. அவள் அப்போது வீரச்சாவைத் தழுவிவிட்டாள். நிலமை மிகவும் மோசமாகியது. பாதுகாப்பற்ற அந்த வெளியில் நின்று சண்டை செய்யமுடியாது.. அப்படிச் செய்தாலும் பெரும் இழப்புக்களைச் சந்திக்கவேண்டிவரும் என எண்ணிய எமது குழுவினர் பின்வாங்கி, பாதுகாப்பான இடத்தில் நின்று சண்டையைத் தொடர்ந்தார்கள். இந்நேரத்தில் மாலதியைத் தூக்கிக்கொண்டு செல்லமுடியாத இக்கட்டான நிலையில், அந்த வெளியில் இருந்த பூவரசமரத்தின் கீழ் கிடத்திவிட்டுச் சண்டை செய்தார்கள்.

இந்திய இராணுவத்தினர் பெரும் கவசவாகனங்களுடனும் கனரக ஆயுதங்களுடனும் பெரிய ஆட்பலத்துடனும் முன்னேறத்தொடங்கினர். அந்த ஆயுத, ஆட்பலத்துக்கு ஈடுகொடுக்கமுடியாது பின்வாங்கவேண்டிய நிலை எம்மவருக்கு ஏற்பட்டது. திடீரென்று சண்டை ஆரம்பிக்கப்பட்டதால் எதிரியின், ஆயுத, ஆட்பலத்துக்கு ஏற்றவண்ணம் எம்மைத் தயார்படுத்திக்கொள்ள எம்மால் முடியவில்லை. மாலதியின் உடல் அந்த பூவரச மரத்தின் கீழ். அவள் இறந்து விட்டாலும் அவளது உடலை எப்படியாவது எடுத்துவிடவேண்டும். எமது இயக்கத்தைப் பொறுத்தவரை யாரும் இறந்துவிட்டால் அவர்களை அப்படியே விட்டுவிடுவதில்லை.எவ்வளவு கஸ்டத்தின் மத்தியிலும் போராளிகளின் உடல்களை மீட்பதுதான் எமது இயக்க மரபு.

முதல் நாள் சண்டை முடிந்து பார்த்தபோது, எம்மில் நான்கு பேரைக் காணவில்லை. மாலதி ரஞ்சி, கஸ்தூரி, தயா .. இந் நால்வரில் மாலதி இறந்தது தெரியும். மிகுதி மூன்று பேரின் நிலை ..? என்ன நடந்திருக்கும் என்றே தெரியவில்லை. மறு நாள் மீண்டும் சண்டை. முன்னேறிச்செல்கின்ற தோழிகள் மாலதியின் உடல் தாம் வைத்த இடத்திலேயே இருப்பதைப் பார்த்து, மற்ற மூவருக்கும் என்ன நடந்திருக்கும் என்று தீர்மானிக்க முடியாத நிலையில் மாலதியின் உடலைத் தூக்கியபடி திரும்பி வந்தார்கள்.

அன்று இருந்த சூழ்நிலையில் பரவலாக எல்லா இடமும் சண்டை தொடங்கிய நிலையில், எமது முதல் பெண் மாவீரரான மாலதியின் வீரச்சாவை மக்கள் மத்தியில் பெரிய அளவில் கொண்டாட முடியாத நிலையில், போராளிகளின் இறுதி அஞ்சலிகளுடன் அவளுடைய புகழுடல் யாழ்ப்பாணத்தில் குருநகர் என்னுமிடத்தில் அமைந்துள்ள சவக்காலையில் புதைக்கப்பட்டது. (15)

மாலதி மறைந்து ஆறு வருடங்களாகிவிட்டன. அவளை என்றும் எமக்கு நினைவுபடுத்தியவண்ணம் கோப்பாய் - கைதடி வெளியில் அமைக்கப்பட்டுள்ள நினைவுத் தூபி அவளது பெயரைச் சொல்லியவாறு, அவள் வீரச்சாவைத் தழுவிக்கொண்ட அதே இடத்தில் நிமிர்ந்து நிற்கின்றது. அத் தூபி எதிர்காலச் சந்ததிக்கு தமிழீழத்துப் பெண்களினது போர் வரலாற்றின் ஒரு பகுதியைச் சொல்லும் என்பதில் சந்தேகமில்லை.

## புதைகுழி வார்ப்புகள்...

(10-ஆம் பக்கத் தொடர்ச்சி)

நான் ஒவ்வொரு தடவையும் அழும்போதெல்லாம் அம்மாவால் எனைப் புதிராகத்தான் பார்க்க முடிந்தது. யாராலும் 'உன் உணர்வுகளை நான் ஏற்றுக்கொள்கிறேன், அவை நியாயமானவைதான்' என்று கூறமுடிந்ததில்லை.

"நானும் உன்னைப்போலத்தானே வளர்ந்தேன், ஏன் நீ மட்டும் புதிதாகத் துடிக்கின்றாய்?"

என்றுதான் அம்மாவால் கேட்கமுடிந்தது. அப்போதெல்லாம்,

'நீங்கள் சிறைக்குள் இருப்பதால் நானும் சிறைக்குள் இருக்கவேண்டுமா? நீங்கள் புதைகுழியைச் சொர்க்கம் என்று நினைத்தால், நானும் அவ்வாறே நினைக்க எனக்கென்ன பைத்தியமா? "நான் சிறைக்குள்ளேதானே இருந்தேன். நீயும் சிறைக்குள் இரேன்" எனகிறீர்களே. இது என்ன நியாயம?'

என்று அம்மாவை உலுப்பவேண்டும்போல் தோன்றும். ஆனால் அம்மாவின அப்பாவித்தனமான முகத்தையும், பரிவு தோய்ந்த கணகளையும் பார்க்கும்போது 'பாவம் அவள்தான் என்ன செய்வாள்? அடிமைத்தனத்தையே நியாயமாக்கி இது தான் உனக்கு விதிக்கப்பட்டது' என்று இந்தச் சமுதாயம் அவளின் சிந்தனையைக்கூட மழுங்கடித்துவிட்டது. சிறையையே சுவர்க்கம் என்றெண்ணும் பெரிய வலையை அவள்மேல் போட்டுவிட்டது என்று தோன்றும்போது, யார்மேல் கோபத்தைக் காட்டுவது என்று புரியாமல், அழமட்டுமே முடிந்தது. எனக்குள்ளேயே நான் புதைந்து கொண்டேன்.

என்னையறியாமலேயே வழிந்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டு நிமிர்ந்தபோது, கருஞ்சிவப்பானரோஜாப் பூக்கள் என்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டன. மனத்தை இலேசாக்க முயன்றவாறு மீண்டும் 'கனவு'க்குள் புதைய எழுந்தபோது, படலை திறக்கும் சத்தம்கேட்டு, எதிர்பார்ப்போடு திரும்பிப் பார்த்தேன். நான் நினைத்ததுபோலவே, சிரிக்கும் கண்களில் உறுதி மிளிர, துள்ளல் நடையுடன் உலகமே தாசு என்று, ஒட்ட வெட்டிய கூந்தலுடன், இடுப்பில் இறுகிய பெலட்டின் கீழ் நீண்டிருந்த சேட்டின் நுனியும், பாதம்வரை நீண்டிருந் ஜீன்சுமாக 'அவர்கள வந்துகொண்டிருந்தார்கள்' வீட்டின் பக்க வாசலில் என்னைக் கண்டதும் மென்மையாய் அரவணைப்பாய் புன்னகைத்தார்கள். அவர்களில் ஒருத்தி சிறு துள்ளலோடு ரோஜாச் செடியருகே ஓடி, இரு கைகளாலும் கொப்பைபற்றி முக்கின் நுனி பூவிதழைத் தொட்டுவர, பெரிதாக முகர்ந்து, ஒரு முறை கணகளை அழுந்த மூடி அதனை அனுபவித்தாள். நான் ஆச்சரியத்தோடு அவளைப் பார்த்தேன் இவர்கள் எங்கள் பக்கத்து வீட்டுக்கு வந்ததிலிருந்து எனக்கு நிறைய ஆச்சரியங்களைக் கொடுத்துவிட்டார்கள். நான் செய்ய நினைத்ததை ..... எனது ஏக்கங்கள் நிறைந்த ஏமாற்றங்களை... நான் செய்யக் கூடாது, என்னால் செய்யமுடியாது என என் சுற்றத்தால் தடுக்கப்பட்ட செயல்களை அவர்கள் வெகு இயல்பாகச் செய்தார்கள். அவர்களது மகிழ்ச்சியும் துள்ளலும் அலட்டிக்கொள்ளாத, அமுங்கிபோகாத சுபாவமும் கொஞ்சங் கொஞ்சமாக என்னையும் வெளியில் இழுப்பது உண்மைதான். இல்லையானால், இதுவரைகாலமும் நான் புரட்டிப்பார்க்கவே பயந்த, இறந்துபோயிருக்கும் என நான் நினைத்த எனது ஆழ்மன ஏக்கங்களை, நான் புதைகுழிக்குள் அமுக்கப்பட்ட வரலாற்றை இவ்வளவு இலகுவாகத் திருப்பிப்பார்க்க இயலுமா, என்ன?

நான் அழுக்கம் குறைந்ததால் ஏற்பட்ட இலேசான ஆசுவாசத்தோடு அவர்களைப் பார்த்தேன். பூவை முகர்ந்தவள் என்னருகில் வந்து, எனது கைகளைப்பற்றி,

"என்னக்கா?"

என்றாள்.

எனது மனம் சிலிர்த்துக்கொண்டது.

மகளிரின் சாதகம் தமிழீழத் தாயகம்